# பாரதிதாசன் பரம்பரை





உவமைக்கவிஞர் சுரதா

# பாரதிதாசன் பரம்பரை

('பொன்னி'யில் வெளிவந்த
47 கவிஞர்களின் கவிதைகள்)

தொகுப்பாசிரியர் :

உவமைக் கவிஞர் சுரதா

சுரதா பதிப்பகம்
56 அ, டாக்டர் இலட்சுமணசாமி சாலை
கலைஞர் கருணாநிதி நகர்
சென்னை-600 078

நூல் : பாரதிதாசன் பரம்பரை

தொகுப்பு : உவமைக் கவிஞர் சுரதா

முதற் பதிப்பு : 1993, டிசம்பர்

வெளியீடு : சுரதா பதிப்பகம்
கலைஞர் கருணாநிதி நகர்
சென்னை-600 078.

அச்சிட்டோர் :
**மூவேந்தர் அச்சகம்**
இராயப்பேட்டை,
சென்னை-600 014.

**விலை : ரூ. 15-00**

---

## படையல்

பாரதிதாசன் பரம்பரையைப்
பாருக்கு அறிமுகப்படுத்திய
'பொன்னி' இதழின் ஆசிரியர்
மூதறிஞர்
**முருகு சுப்பிரமணியம் அவர்கட்கு**
இக்கவிதை நூலைக்
காணிக்கையாக்குகிறேன்!

—சுரதா
23-11-93

---

# பாரதிதாசன் பரம்பரை

1. மு. அண்ணாமலை
2. நாரா. நாச்சியப்பன்
3. சுரதா
4. புத்தனேரி சுப்பிரமணியன்
5. ராம. நாக. முத்தையா
6. முடியரசன்
7. ராம.வே. சேதுராமன்
8. வாணிதாசன்
9. சி. இராமசாமி
10. சாமி. பழனியப்பன்
11. அண. இராமநாதன்
12. கோவை இளஞ்சேரன்
13. சி. திருநாவுக்கரசு
14. ச. சீத்தாராம்
15. தெ. ஜெயராமன்
16. நா. மாணிக்கவாசகம்
17. தமிழரசன்
18. கே.டி. தேவர்
19. நா. கு. நமச்சிவாயன்
20. இரா. குழூஉத்தலைவன்
21. கு. திரவியம்
22. சு. வழித்துணைராமன்
23. ரங்கதுரைவேலன்
24. வ. செ. குலோத்துங்கன்
25. வெ. குருசாமி
26. தன. சுந்தரராசன்
27. டி.கே. கிருஷ்ணசாமி
28. பெ. நாகப்பன்
29. பெரி சிவனடியான்
30. எஸ். சிவப்பிரகாசம்
31. சி.அ. சீனிவாசன்
32. மு. ரங்கநாதன்
33. ஜே. எஸ். பொன்னய்யா
34. கதி. சுந்தரம்
35. எம்.எஸ். மணி
36. நா. கணேசன்
37. தி. அரசுமணி
38. ப. சண்முகசுந்தரம்
39. க. பரமசிவன்
40. மா. தேவராசன்
41. மா. குருசாமி
42. வி. முத்துசாமி
43. ஷெரீப்
44. சுப்பு ஆறுமுகம்
45. சங்கீத பூஷணம் எஸ். எம். ராமநாதன்
46. கி. மனோகரன்
47. வே. சண்முகம்

# அணிந்துரை

'பொன்னி' இதழ் புதுக்கோட்டையிலிருந்து 1947-ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் முதல் பவனி வரத் தொடங்கியது. புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் கவிதைகளையும் அவர்தம் இலக்கியச் சிறப்பையும் தமிழுலகத்தில் பரப்புவதை முக்கிய நோக்கமாகக் கொண்டு ஆரம்ப முதலே பாவேந்தரின் கவிதையை ஒவ்வோர் இதழிலும் வெளியிட்டு வந்தோம். அந்த நாளில் புரட்சிக் கவிஞருக்குத் தமிழகத்தில் அத்துணைப் பெரிய செல்வாக்கு இல்லை. திராவிடர் கழகத் தொண்டர்கள் மத்தியிலும் சுயமரியாதை இயக்கத்திலும் மட்டுமே பாவேந்தரின் புகழ் பரவி இருந்தது. அந்த நிலையை மாற்றித் தமிழ் இலக்கிய உலகம் அனைத்திலும் பாவேந்தரின் பெயரும் அவர் வடித்திருக்கும் கவிதைகளும் பரவ வேண்டுமென்று நாங்கள் ஆசைப்பட்டோம்.

பொன்னி இதழ் தான் வாழ்ந்த ஏழு ஆண்டு காலத்தில் தன்னுடைய இந்த இலட்சியத்தில் நல்ல வெற்றியைக் காண முடிந்தது என்பதே எனது கருத்தாகும்.

பாரதி தாம் வாழ்ந்த காலத்தில் பாரதிதாசனை அறிமுகப்படுத்தும் போது, 'பாரதி கவிதா மண்டலத்தைச் சேர்ந்த கனக சுப்புரத்தினம்' என்று குறிப்பிட்டார். அதற்கேற்ப பாவேந்தர் தமது பெயரைப் பாரதிதாசன் என வைத்துக் கொண்டு கவிதைகளைப் படைத்து வந்தார். பாரதிக்குப் பிறகு அவருடைய வாரிசாகத் தம்மைப் பறை சாற்றிக் கொள்ள முன் வந்தவர் பாரதிதாசன் ஒருவர் மட்டுமே என்று சொல்வது சரியாக இருக்கும். ஆனால் பாரதிதாசனுக்கு, அவர் காட்டிய மரபில், அவர் கொள்கை வழி நின்று பாடல் இயற்றக் கூடியவர்கள் ஏராளமாக ஆங்காங்கு தோன்றியிருப்பதை நாங்கள் உணர முடிந்தது.

வாழை மரத்தடியில் பல கன்றுகள் குருத்து விடுவது போல அந்த இளங் கவிஞர்களின் கவித்திறன் பாரதிதாசன் பாணி யில் ஆற்றலோடு முளைவிடத் தொடங்கி இருப்பதையும் நாங்கள் கண்டோம். பாரதிதாசனின் கவிதா மண்டலம் பாரதியாரின் கவிதா மண்டலத்தைக் காட்டிலும் பன்மடங்கு பரந்துபட்டதாக நாடெங்கும் பரவி நிற்பதை யும் நாங்கள் உணர முடிந்தது. வளர்ந்துவரும் இந்த இளங் கவிஞர்களையெல்லாம் 'பாரதிதாசன் பரம்பரை' என்னும் பொது மகுடமிட்டுப் பொன்னி இதழ்களில் ஏன் அறிமுகப் படுத்தக் கூடாது என்ற எண்ணம் உருவாயிற்று.

அப்போது பொன்னி இதழ்களை வெளியிடுவதில் எனக்குத் துணைபுரிந்து வந்தவர்கள் இருவர் கவிஞர்களாக இருந்ததையும் அவர்கள் என் எண்ணத்திற்குக் கண் கூடான சான்றாகத் திகழ்ந்தார்கள் என்பதையும் குறிப்பிடுவது மிக அவசியமாகும், நாரா. நாச்சியப்பன், மு. அண்ணாமலை ஆகிய அந்த இரண்டு இளங்கவிஞர்களும் பாரதிதாசன் பரம்பரையில் முன் வரிசையைப் பிடித்துக் கொண்டதில் வியப்பேதும் இல்லை.

அந்த நாளில்—அதாவது ஏறத்தாழ 32 ஆண்டுகளுக்கு முன்பு—பாரதிதாசன் பரம்பரையில் அறிமுகமாகி இன்று தம் பெயருக்கு ஏற்ப பாவேந்தரின் தலை மாணாக்கராகவும் தமிழக அரசின் பாவேந்தர் விருதினைப் பெற்றிருக்கும் முதல் கவிஞராகவும் திகழ்பவர் உவமைக் கவிஞர்—புலமைக் கரசு சுரதா. அவருடைய மலேசிய வருகை, பொன்னி வளர்த்த பாரதிதாசன் பரம்பரையை இத்தனை ஆண்டு களுக்குப் பிறகு மீண்டும் நினைத்துப் பார்ப்பதற்கும், எண்ணியெண்ணி மகிழ்வதற்கும் ஓர் அரிய வாய்ப்பாக அமைந்தது.

கவிஞர் சுரதாவுக்கும் எனக்கும் பரிச்சயம் ஏற்படு வதற்குப் பாவேந்தர்பாரதிதாசனே காரணமாக இருந்தார். 1943-ஆம் ஆண்டு சென்னையில் 'முத்தமிழ் நிலையம்'

என்னும் பெயரில் ஒரு கலைப் படைப்பு நிலையத்தைப் பாவேந்தருக்காக நிறுவி இருந்தோம். பாரதிதாசன் எண்ணங்களை இயல், இசை, நாடகம் என்னும் முத்தமிழ் வாயிலாகவும் நாடெங்கும் மேடை ஏற்றுவது எங்கள் திட்டம். அங்கே பாரதிதாசன் ஆணைக்கு இணங்கக் கலைஞராகப் பணியாற்ற வந்தவர் கவிஞர் சுரதா. அப்பொழுது எங்களிடையே மலர்ந்த நட்பு கோப் பெருஞ் சோழன்—பிசிராந்தையார் நட்பைப்போல நாளும் தழைத்து வந்தது. அதன் பிறகு காலத்தின் சுழற்சியில் நான் மலேசிய நாட்டுக்கு வந்து விட்டேன். சுரதா தமிழகத்தில் கவி உலகத்தில் கோலோச்சி வந்தார். இடையில் ஓடிய 26 ஆண்டுகளும் நாடுகளின் மாற்றமும் இடையில் உள்ள 1,500 மைல் தொலைவும் எங்கள் நட்பைச் சிதைக்க முடிய வில்லை என்பதைச் சுரதாவின் வருகையும் அவருடைய இனிய—எளிய பண்புகளும் எனக்கு மெய்ப்பித்தன.

இங்கு வந்தவுடன் அவர் கேட்ட முதல் கேள்வி, பாரதிதாசன் பரம்பரையைப் பற்றித்தான். நல்ல வேளை யாகக் கடல் கடந்து மலேசியாவுக்கு வந்த போது பொன்னி தொகுதிகளையும் 'பைண்டு' செய்து கையோடு கொண்டு வந்திருந்தேன். அதனால் அவருடைய கேள்விகளுக்கு அதிகம் பதில் சொல்ல வேண்டிய அவசியம் இல்லாமல் போய்விட்டது. பொன்னி தொகுதிகளை அவரிடம் ஒப்படைத்து விட்டேன். இந்நாட்டில் அவர் தங்கிய இரண்டு மாத காலத்தில் பொன்னி இதழ்களைப் புரட்டி அவற்றில் 'பாரதிதாசன் பரம்பரை' என்னும் மகுடத்தின் கீழ் அறிமுகமாகியிருக்கும் 47 இளங் கவிஞர்களையும் அவர் களின் பாடல்களையும் கண்டு பிடித்து அவற்றை எல்லாம் தாமே படி எடுத்துப் பத்திரமாகச் சேர்த்து வைத்துக் கொண்டார். அதுமட்டு மன்றி தாம் செல்லும் இடமெல் லாம் பேசுகின்ற மேடைகளில் எல்லாம் பொன்னி உருவாக்கிய பாரதிதாசன் பரம்பரையைப் பற்றிக் குறிப் பிடத் தவறுவதே இல்லை.

இந்த 47 கவிஞர்களில் இன்று புகழ் மிக்கக் கவிஞர்களாக விளங்குபவர்கள் பலர் உண்டு. மற்றத் துறைகளில் பெயர் பொறித்து நிற்பவர்களும் உண்டு. அன்று குடத்து விளக்காக இருந்த இந்தக் கவிஞர் கூட்டத்தைக் குன்றிலிட்ட தீபமாக ஏற்றி வைக்கின்ற வாய்ப்பு பொன்னிக்கு 37 ஆண்டுகளுக்கு முன்பு கிட்டியது பெரும் பேறாகும்.

கவிஞர் சுரதா தமது ஆசானாகிய பாவேந்தரிடம் மட்டற்ற ஈடுபாடும் மதிப்பும் கொண்டவர், பாவேந்தரின் பெருமையினை நாளும் பரப்பி வருகின்றவர். பாவேந்தரின் கவிதைப் பணியை அவருடைய வழியில் நின்று சரியாகச் செய்து வருகின்றவர். 'பாரதிதாசன் பரம்பரை' என்னும் இந்நூலை முறையாகத் தமிழகத்திற்குப் படைத்திருப்பதன் மூலம் கவிஞர் சுரதா பாவேந்தரிடத்தும், பாரதிதாசன் பரம்பரையைச் சேர்ந்த தமது சகோதரக் கவிஞர்களிடத்தும், அதற்கெல்லாம் மேலாகக் கவிதை உலகத்தின் பாலும் அவர் கொண்டிருக்கும் பேரார்வம் நன்கு புலனாகிறது. பாரதிதாசன் வழியில் இன்று தலை தூக்கி வரும் இளங் கவிஞர்களை எல்லாம் ஊக்கப்படுத்தித் தமக்குப் பின் ஒரு புதிய பரம்பரையை உருவாக்கிக் கொண்டிருக்கும் கவிஞர் சுரதாவின் பரந்த உள்ளத்திற்கு இந்த நூல் தக்க சான்றாகும்.

கோலாலம்பூர்
27-7-1979

**முருகு சுப்பிரமணியன்**
ஆசிரியர்
**புதிய சமுதாயம்.**

# முகம் காட்டும் முன்னுரை

அதியமான் நெடுமானஞ்சியின் முன்னோர்கள் நாகநாடு சென்று இனிக்கும் கரும்பைத் தமிழ்நாட்டுக்குக் கொண்டு வந்தனர்.

கரிகாற் பெருவளத்தான் காலத்தில் சாரமா முனிவன் மணக்கும் செவ்வந்திப் பூவைக் கொண்டு வந்தான்.

சூரவாதித்தன் என்பான் நாகநாட்டிலிருந்து சுவைக்கும் வெற்றிலைக் கொடியைக் கொண்டுவந்தான்.

ஔவையாராலேயே பந்தானந்தாதி பாடப்பட்ட பந்தன் எனும் காவிரிப்பூம்பட்டினத்து வணிகன், நாகநாடு சென்று ஆயுள் வளர்க்கும் அருநெல்லிக் கனியாம் கரு நெல்லிக் கனியைக் கொண்டுவந்தான்!

இப்படி, வெளிநாடுகளுக்குச் சென்றவர்கள் அந்தந்த நாட்டு உணவுப் பொருட்களையும் உல்லாசப் பொருட்களை யுமே தமிழ் நாட்டிற்குக் கொண்டு வந்தனர்.

ஆனால் நானோ-1979 ல் கவியரசர் அன்பானந்தனின் கவிதை நூலை வெளியிடுவதற்காக மலேசிய நாட்டிற்குச் சென்று பாவேந்தர் பாரதிதாசன் பரம்பரைக் கவிஞர்களின் பட்டியலையும் பொன்னி இதழிலிருந்து அவர்தம் படைப்பு களையும் கொண்டுவந்தேன். இது ஒரு வரலாற்றுச் சிறப் பல்லவா?

இனிமேல் வெளிநாடுகளுக்குச் செல்கிற எல்லோரும், என்னைப் பின் பற்றி சிந்தனைகளைத் திரட்டி வந்து தமிழ் நாட்டில் பரப்பவேண்டுமென்பது என்னுடைய ஆசை!

எனதாசான் பாவேந்தரின் புகழ் நிலைக்க எத்தனையோ நான் செய்திருந்தாலும் இந்நூலையே நான் செய்தவற்றிலெல்லாம் தலையாய ஒன்றாகக் கருதுகிறேன்.

நாயன்மார்கள் வரலாறு 63 பேருடன் முடிந்துவிட்டது.

ஆழ்வார்கள் வரலாறு 12 பேருடன் முற்றுப் பெற்று விட்டது.

பாவேந்தரின் பரம்பரை 47 பாவலர்களுடன் நின்று விடவில்லை. நீண்டு கொண்டே இருப்பது என் மனதிற்கு மகிழ்ச்சியைத் தருகிறது.

வளரட்டும் பாவேந்தர் பரம்பரை!

மலரட்டும் தமிழ்க்கவிதைத் தலைமுறை!

56அ, டாக்டர் இலட்சுமணசாமி சாலை,
கலைஞர் கருணாநிதி நகர்,
சென்னை—600078
தொலைபேசி : 428508

அன்பன்
**சுரதா**
23-11-93

# பாரதிதாசன் பரம்பரை

திரு. மு. அண்ணாமலை கொத்தமங்கலத்தைச் சேர்ந்தவர். பாரதிதாசன் பரம்பரையினர் இவர் என்பதற்கு 'காவிரி' என்ற இந்தப் பாடல் சிறந்த எடுத்துக் காட்டாகும்.

—ஆசிரியர்

## காவிரி

கடல்போலக் குமுறி இசைகொட்டிக்
காவிரி நடப்பதனைக் காண்மின்!
கடகடவென் றோலமிடும் நடையைக்
காண்டோறும் காண்டோறும் அணிசால்
மடவன்ன நங்கையரைக் கூவி
மங்கையெனக் காவிரியைச் சொன்னால்
நடையழகு மிகவுடைய அன்னார்
நகையாரோ என்றெனக்குத் தோன்றும்!

நடப்பினில் அமைதியிலாக் குறையால்
நங்கையிலை எனக்கூறல் முறையோ?
இடம்விட் டிடம்பெயர்ந்து மங்கை
இனியதன் காதலனைக் காணத்
திடங்கொண் டோடுகின்ற செயலில்
திகழ்கின்ற காதலுளத் துடிப்பில்
அடக்கமெங் கிருத்தற்கு முடியும்?
ஆகாதே என்றெனக்குத் தோன்றும்!

ஆனாலும் காவிரிப் பெண்ணே!
ஆண்டுபல எய்தியும் இன்னே
தேனார்ந்த செந்தமிழைப் போலே,
திகழிளம் பெண்ணானாய்; என்னே!
வானார்ந்த காதல்செய்யும் பெண்போல்
வாழ்கின்றாய் வீறுகொண் டென்னில்
கானாளும் முதுமையுனை எய்தாக்
கருத்தினை விளக்காயென் கண்ணே!

வண்ணக் கடலுன்னை ஏற்று
வாழ்தற்கு வேண்டியோ என்றும்
பண்டைத் தமிழ்த்தேனைப் போலே
பச்சையிளம் பெண்ணானாய்? இன்றேல்
தொண்டினைக் கருதியோ என்றும்
தொலையாத இளமையினைக் கொண்டாய்?
விண்டிடுக என்றுமனம் கேட்கும்
விழைவினை என்னென்று சொல்வேன்!

விண்தந்த மழையினை வாங்கி
விழைவோடு தமிழ்நாட்டிற் சென்று
பண்பட்ட நிலமாகச் செய்வாய்
பயிராக்கி உயிர்காக்கும் தாயே;
பெண்மக்கள் தாய்க்குலம் அன்றோ?
பெருவாழ்வும் அவர்களால் அன்றோ?
கண்டொத்த காவிரித் தாயைக்
கருத்தொடு வாழ்த்துவம் வாரீர்!

—மு. அண்ணாமலை

இதழ் : பொன்னி,
பிப்ரவரி 1947.

பின்வரும் பாடலைப் பாடிய இளைஞர் நாரா. நாச்சியப்பன் இராமநாதபுரம் மாவட்டம் ஆத்தங்குடியைச் சேர்ந்தவர். இப்பொழுது திருச்சி தேசியக் கல்லூரியில் படித்து வருகிறார். கவியரசர் பாரதிதாசன் பரம்பரையினர் இவர் என்பதற்கு 'மழை' நல்ல சான்று.

—ஆசிரியர்

## மழை

ஒளிர்வெயில் மறைந்தி ருந்த
ஒருபோதிற் காட்டுப் பக்கம்
குளிர்தரும் காற்று வந்து
குப்பென்று வீசி நிற்க
விழுந்தது மழையின் தூற்றல்
விண்ணெலாம் ஆர வாரம்
எழுந்தது! மேகம் மின்னி
இடித்தது! சிங்கம் என்ன!

வையத்திற் கமுத மாக
வந்திடும் மழையைக் கண்டு,
செய்யதம் உள்ளம் ஆரச்
செடிகளும் கொடிகள் மற்றும்
வெய்யவன் கொடுமை மாற்ற
விளங்கிடும் மரங்கள் தாமும்
கைஎனத் தளிர்கள் நீட்டிக்
களித்திடும் சீர்த்தி என்னே!

வயற்புறம் உழவர் வந்து
வானத்தைப் பார்த்து நின்றார்.
செயற்கரும் பணியே யாய
செந்நெலை விளைக்கும் ஆற்றல்
புயங்களில் உள்ள தாலே
பூரித்து நின்றார், பின்னர்
வயலினை உழச்சென் றார்கள்
வாழிய உழவர்! செந்நெல்!

மழைசொட்ட நனைந்து போன
மதிகெட்ட ஓர்கு ரங்கு
குளத்துநீர் மொண்டு யாரோ
கொட்டினார் எனநி னைத்தே
உளங்கொண்ட சினத்தை எல்லாம்
உணர்த்திட நீரை மொண்டு
மளமளவென் றிறைத்த காட்சி
மதிக்கொரு நகைவி ருந்தாம்!

வானைச்சார் மேகம் எல்லாம்
வலிமிகும் யானைக் கூட்டம்!
யானைகள் ஒன்றை யொன்று
அழித்தன மோதி மோதி!
தேனைப்போல் இனிய சொல்லாய்!
திகழ்ந்தன தந்த மாக
மீனைப்போல் ஒளிரும் உன்கண்
கவர்ந்திடும் மின்னல் கண்டாய்.

விழுந்திடும் மழையி னாலே
வீதியில் ஓடும் நீரில்
எழுந்திடும் கொப்பு ளங்கள்
இன்முத்துச் சிப்பி ஒக்கும்!
அழிந்திடும் அவைகள் பின்னர்
அவ்விடம் வேறு தோன்றக்
குழந்தைகள் வியந்து பார்த்துக்
கொட்டும்அம் மழையில் நிற்கும்!

விலையிலா நெல்வி ளைத்தே
விளையாடச் சிறுவர்க் கெல்லாம்
அலைநிலாம் ஆறொன் றாக்கி
அழகிய வீதி சேர்த்தே
உலகெலாந் தழையச் செய்தும்
உணர்ச்சியோ டெழுச்சி தந்தும்
அலகிலாப் பணிகள் ஆக்கி
அளித்திடும் மழைக்கெம் வாழ்த்தே!

—நாரா. நாச்சியப்பன்

*இதழ் பொன்னி*

1947—*மார்ச்*



''சொல்லடா'' என்ற பாடல் இளைஞர் ராஜகோபாலன் இயற்றியது. ராஜகோபாலன் சிக்கல் பழையனூரைச் சேர்ந்தவர். இப்பொழுது ''சினிமா வசனம்'' எழுதுவதில் முனைந்துள்ளார். இவர் புனைபெயர் ''சுரதா'' ''சுப்புரத்தின தாசன்'' என்று அப்பெயர் விரியும். பெயருக்கேற்ற உயர்வு இவர் பாடல்களில் உண்டு.

—ஆசிரியர்

## சொல்லடா!

கோங்கம் மலர்பூத்த—பசுங்
குன்றம் முழுநிலவை
வாங்கிப் புசிக்குதுபார்—குளிர்
வண்ணப் பனிச்சிரிப்பே!
தீங்கனிச் செந்தமிழ்தான்—எங்கள்
சிறப்பு விளக்கமென்றே
மாங்கனி வாய்திறந்து—நான்
மகிழ்ந்திடச் சொல்லாயோ!

''இச்சகத் தார்க்குநாங்கள்—எதிலும்
இளைத்தவ ரல்லகாண்!
அச்சம் இடித்துவிட்டோம்—நாங்கள்
ஆண்மை வரிப்புலிகள்!
உச்சி இமயத்திலே—புகழ்
ஓங்கும் மறக் குலத்தின்
மச்சக் கொடிபறக்கும்''—என்று
''மாமல்லா!'' நீசொல்லடா!

''வானை அளந்திடுவோம்—புது
வையம் நிறுத்திடுவோம்!
தேனைநிகர் தமிழ்க்குத்—துளி
தீங்கு விளைப்போர் பெரும்
ஆனைகள் போல்வரினும்—நாங்கள்
ஆயிரம் சிங்கங்கள்தாம்''—எனச்
சேனை முரசொலித்து—இதைச்
செப்படா தோள்உயர்த்தி!

—சுரதா

இதழ் பொன்னி,
1947 ஏப்ரல்



தோழர் புத்தனேரி ரா. சுப்பிரமணியன் நல்ல தமிழ்த் தொண்டர். தமிழகம் விடுதலை பெறுவதில் அவருக்கு மிகுந்த ஆர்வம் உண்டு. எழுச்சி பயக்கத் தக்க கவிதைகள் பல இயற்றியிருக்கிறார். ''வானம்'' அவர் இயற்றியது.

—ஆசிரியர்

## வானம்

வையத்தின் விரிகுடையாய், வானமே!
உன்னிலையை மதிப்ப தென்றால்
மையத்தைக் காணோமே! பிடிகம்பும்
கம்பிகளும் வாய்த்தல் இன்றே!
மெய்யான குடையாயின் வெயில்தடுக்க
வேண்டாமோ? உன்னைத் தாண்டிப்
பெய்மாரி ஒழுகுவதேன்? பெருங்காலம்
உழைத்துடலும் பீற்றல் ஆச்சோ?

நீலஞ்சேர் விதானத்துப் பந்தலெனக்
கூறுவது நேர்மை யென்றால்
காலில்லாப் பந்தலுமெக் காலத்தும்
நிலைக்குமெனக் கருதற் கில்லை!
வேலையென விரிகுளமோ! விண்மீன்கள்
அல்லிபல விரிந்த பண்போ?
காலத்தை உண்டாக்கும் அகன்றபெருங்
கருவியெனக் கழற லாமோ?

விண்மீன்கள் புரள்கின்ற வியன்கடலென்
　　றேகொண்டால், விண்ணே? உன்றன்
வெண்மேகம் அலைபோன்று சுருள்கின்ற
　　பண்பதுவும் மிகப்பொ ருத்தம்;
தண்மதியோர் கப்பலெனச் செல்கின்ற
　　தென்பதுவும் தவறின் றாயின்,
நண்பகலுக் கிவ்வுவமை பொருந்தாதென்
　　றேசொல்வர், நாவல் லோரே!

விடிவெள்ளி தோன்றிடவும் வெளுக்கின்ற
　　கிழக்கின்கண் ஞாயி றென்போன்
அடிவானத் திருந்துயர; உலகெல்லாம்
　　பொன்மயமாம் அழகுக் காட்சி,
நெடிதாகி நில்லாமற் பகலெல்லாம்
　　கொடும்வெயிலாய், மாலை நேரம்
படிகின்ற போழ்தத்தே குருதிநிறம்
　　படர்வது தான் புரட்சிப் பண்போ?

நிலைமையினுக் கேற்றாற்போல் தோற்றங்கள்
　　பலகாட்டி, நிலவும் வானே!
நிலவொளியும் கதிரொளியும் பெறுகின்றோம்;
　　அறிவொளியும் வேண்டி நின்றோம்!
உலகறிஞர் பலருன்னை ஆராய்ந்தும்
　　நிலைமுற்றும் உணர்ந்தா ரில்லை!
கலைகட்கும் எட்டாது கருத்தெல்லாம்
　　கவர்கின்றாய், காட்சி யாலே!

— புத்தனேரி ரா. சுப்பிரமணியம்

இதழ்: பொன்னி
1947—மே

*இளைஞர் ராம.நாக. முத்தையா தன்மான இயக்கத்தைச் சார்ந்தவர். காரைக்குடி அருகிலுள்ள சண்முகநாதபுரம் அவர் ஊர். ''தளபதி'' என்று தம்மை அழைத்துக் கொள்ள விரும்புவர். ''எத்தனை தடைகள்'' என்ற பாடல் அவர் இயற்றியது!*

—*ஆசிரியர்*

## எத்தனை தடைகள்?

என்னுளத்து விருப்பம்போல் என்னை யன்னோன்
 ஏற்றிடவும் இசைவானோ? இல்லை தானோ?
என்செய்வேன்? எப்படியான் அன்னோன் உள்ளத்
 திசைவுதனைப் பெற்றிடுவேன்? காதல் வாழ்வில்
என்னிச்சை, ஒருமுடவன் கொம்புத் தேனை
 எய்தொண்ணா நிலைபோல இருந்து போமோ?
நின்றுவெறும் விழலுக்கு நீரி றைத்த
 நிலையாகப் போய்விடுமோ, பயனே யின்றி?

அப்படியே அவர்மணக்க ஒப்பினாலும்
 அவர்பெற்றோர் இசைவாரோ? இசைந்த பின், என்
அப்பாவும் அம்மாவும் ஒப்பு வாரோ?
 யான்செய்யும் பிடிவாதம் அவரை யெல்லாம்
அப்படியே மனமிசைய வைத்து விட்டால்
 அடுத்துள்ள உறவின்முறை யார்க ளெல்லாம்
ஒப்பிமணம் காணவரு வாரோ? இல்லை
 ஒதுக்குவாரோ சமுகம்விட்(டு) அவருன் ஒப்பின்

புரோகிதர்கள் பொருத்தமில்லை என்று ரைத்தால்
போங்கதியென்? வாழ்வென்னாம்? இதை நினைக்க
உரோமமெலாம் கூச்செரியும்! உள்ளம் வாடும்!
உடல்கொதிக்கும் காய்ச்சலிலே உயிர்வா
தைப்பட்(டு)
இராதபடி ஓடவழி பார்க்கும்! என்றன்
இருவிழியும் நீர்சொரியும்! ஐயர் சொல்லும்
அரோகர வெனுமொழியும் நெஞ்சில் வந்து
ஆயிரம்வே லாய்ச்சொருகும் அல்லல் வாழ்வே!

—ராம. நாக. முத்தையா

இதழ் : பொன்னி
1947—ஜூன்



*''முடியரசன்'' இசைப்பாடல்கள் எழுதுவதில் தேர்ந்தவர். அவர்தம் இயற்பெயர் துரைராஜ். பெரியகுளம் அவர் சொந்த ஊர். ''நிலவு'' அவர் இயற்றியது.*

*—ஆசிரியர்*

## நிலவு

ஒளிமிகுந்த குளிர்நிலவே உன்னைக் கண்டேன்
உள்ளமெலாம் உவகையுற இன்பங்கொண்டேன்
களிமிகுந்த காதலருக் கின்பத்தோணி
கடைந்தெடுத்த வெண்முத்தம் நின்றன்மேனி
தளிர்போலும் குழந்தைகளின் கதறல்நீக்கும்
தாயர்தமக் குதவிடுவாய்! உலகைக் காக்கும்
எளிமைமிகு தொழிலாளர் அயர்ந்தபோது
எழுந்துமுகம் காட்டிமகிழ் வூட்டும் மாது!

பாம்பொன்று நினைவிழுங்கும் என்று சில்லோர்
பகர்ந்திடுவார் அதைநம்பார் அறிவில் நல்லோர்
வேம்பன்னார் எமைவீழ்த்த இனைய சூழ்ச்சி
விளைத்தார்கள் தொலைத்தார்கள் தமிழர் ஆட்சி.
கூம்புவதேன் தாமரைகள் உன்னைக்கண்டு?
குடைந்துதேன் அருந்தமலர் சென்றவண்டு
தேம்புவதைக் காணாயோ சிறையிற்பட்டு?
சென்றிடுவாய் வெளியில்விடச் சொல்லிவிட்டு.

ஆரியத்தால் ஒளியிழந்த தமிழர்போலே
அழகிழந்தாய் உனையடைந்த மேகத்தாலே
நாரியரின் முகங்கண்டு நாணி உள்ளே
நண்ணினாய் எனஎண்ணி நனைத்தாள் முல்லை.
''வேறினத்தார் நாடாள வீணன் அல்லேன்
வேலெடுத்துப் போர்தொடுப்பேன் வீணர் தம்மைச்
சீரழிப்பேன்'' என்றெழுந்த வீரன் போலே
சிரித்தெழுந்தாய் மேகத்தைப் பிளந்து மேலே!

—முடியரசன்

இதழ் : பொன்னி,
1947—ஜூலை



*காதல் விருந்தைப் படைத்துள்ள நண்பர் இராம. வே. சேதுராமன் அவர்கள் ஆர்வம் நிறைந்த இளைஞர்—அமைதியான உள்ளம் பெற்றவர். அவர்தம் சொந்த ஊர் நாச்சியாபுரம். நிறைய அவர் எழுதுவதில்லை. என்றாலும் அவர் எழுதியவை எவையும் குறைவுடையன அல்ல.*

—ஆசிரியர்

## காதல் விருந்து

நீலத்தில் வண்ண ஆடை
நிகரில்லா வைரப் பூக்கள்
கோலஞ்செய் கச்சு! ஆங்கே
குலுங்கிடும் பருவச் சின்னம்!
மேலெலாம் ஒளியின் சாயல்!
மேகமா? கூந்தல் தானா?
வேலையில் களைத்தார்க் கெல்லாம்
விருந்தடா வானின் காட்சி!

'வானென்று' சொல்வர், அன்னாள்
வனப்பிற்கோர் எல்லை தானோ?
மாநிலம் காப்பாள்! ஆங்கு
மழையெனத் தோற்றம் செய்வாள்!
கானிலம் படைப்பாள்! அந்த
நங்கையாள் செயலின் சக்தி!
வானத்துப் பெண்ணாள் யாண்டும்
வாஞ்சையின் செல்வி வாழ்க!

உடலெல்லாம் தென்றல் பூச்சு!
உள்ளத்தில் இன்ப ஏற்றம்!
கடற்கரைக் காட்சி தன்னிற்
கருத்தொடு கலந்து நின்றேன்.
கடலெனும் காளை! எங்கும்
கைவீசிக் கொண்டி ருந்தான்.
அடங்காத உள்ளத் தான்முன்
அமைதியாய் வானம் நின்றாள்.

தொட்டிட எண்ணங் கொண்டான்
துணிவாகக் கையைப் பற்றிக்
கட்டியே தழுவி இன்பக்
கன்னத்தில் முத்த மிட்டான்!
சட்டென்று முகம் சிவந்தாள்!
சரிந்தது இன்ப ஊற்று!
தட்டிபோல் இருளும் வந்து
தடுத்தது கண்டு வந்தேன்!

—இராம. வே. சேதுராமன்

இதழ் : பொன்னி,
1947, ஆகஸ்டு

''வாணிதாசன்'' புதுச்சேரியைச் சேர்ந்தவர். அவர்தம் இயற்பெயர் ரெங்கசாமி. இப்பொழுது பாகூரில் ஆசிரியர் வேலை மேற்கொண்டிருக்கிறார். கதிரோன் வருகை அவர்தம் கவிதையாற்றலுக்குச் சான்று.

—ஆசிரியர்

## கதிரோன் வருகை

மயல்தரு கீழை நாளின்
  வானத்தைக் காண எண்ணி
வயற்புறம் சென்றேன்; நொச்சி
  மணம்வீசும் வேலி யோரம்
குயில்நுணாக் கிளைகள் தாவிக்
  குக்குகுக் கென்றே பாடும்
செயலற்று நின்றேன் வீசும்
  சிலுசிலு காற்றில் நானே.

சேக்கையை விட்டு மக்கள்
  எழுந்திடச் சேவல் கூவும்;
காக்கைகள் ஒன்றி ரண்டு
  கரைந்திடும் தென்னந் தோப்பில்
வாக்கினைத் திருத்திக் கொள்ளும்
  வாழைமேல் கிள்ளை தாவி
போக்கிடும் இருளைக் காலை
  செந்நிறம் கீழ்வான் பூசி

விரிமலர் தேடி என்றன்
மேலுராய்ந் தோடும் வண்டு;
கருநிற மேகம் தூக்கம்
கலைந்தெழு சோம்பல் போலப்
புரண்டெழும் கீழ்வா னத்தே
புதுப்புது அழகைக் காட்டும்;
எரிக்கிரை யாகு தையோ
தொடுவானம்! தீ! தீ! எங்கும்!

பொன்னிறப் பரிதி வட்டம்
போர்வையை விலக்கி மெல்ல
நன்னிலை எட்டிப் பார்க்கும்
நகர்ந்தெழும் விரைந்து வானில்;
தென்னைமேல் புதர்மேல் குட்டை
தேங்கிய நீரின் மீது
பொன்மழை அடடா! அந்தப்
புதுமையே புதுமை மாதோ?

—வாணிதாசன்

*இதழ் பொன்னி, செப்டம்பர்,* 1947
*மலர்*—1
*இதழ்*—8



''அவளுக்கு இல்லை'' என்ற பாடலின் ஆசிரியர் சி. இராமசாமி உத்தமபாளையம் உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராக இருந்து வருகிறார். நாமக்கல்லுக்கு மேற்கேயுள்ள கீரம்பூர் என்னும் கிராமம் அவர்தம் சொந்த ஊர். ''கருவைக் கண்ணன்'' ''சி. இரா. தேசிகன்'' என்ற புனைபெயர்களிலும் அவர் பாடல்கள் எழுதப்பட்டுள்ளது.

—ஆசிரியர்

## அவளுக்கு இல்லை

மணஞ்சேர்த்துத் தன்மகளின் வாழ்வைக் காண
மனத்தாசை மிகவிருக்கும் வருமாப் பிள்ளை
பணஞ்சேர்த்த குடும்பத்தைச் சேர்ந்தோ னானால்
பரவாயில் லையென்னும் விருப்பி ருக்கும்.
கணம்பார்க்கும் சோதிடனை அழைத்து வந்து
கலியாண நாள்பார்க்கும் கருத்தி ருக்கும்.
குணம்பார்த்தங் கிருவருக்கும் பொருத்தங் காணும்
குறிக்கோள்தான் சிறிதேனும் அவளுக் கில்லை.

''உரிமைப்பெண் கேட்கின்றார் கொடுக்க லாமா?
உரைத்தருள்க சாமி''யெனப் பல்லி வாயில்
சரியாகச் சகுணங்கேட் கின்ற குப்பைச்
சாத்திரமுந் தெரிந்திருக்கும். கலியா ணத்தில்
விரிவான சாப்பாடோ டிசைக்கச் சேரி
விதவிதமாய் நடத்துதற்கும் விருப்பி ருக்கும்
தெரிவையவள் மனதிலவன் இடம்பெற் றானா?
எனத்தேடும் அறிவதுதான் அவளுக் கில்லை!

குலம்பார்த்துச் சுற்றத்தார் கூட்டம் பார்த்துக்
கொடுத்தால்தான் நல்லதெனும் குறிப்பி ருக்கும்.
நிலஞ்சேர்த்த குடும்பத்தைப் பிடிப்போ மென்னும்
நினைவிருக்கும், மகள்பேரில் போகம் நூறு
கலம்விளையும் வயல்எழுது மாறு கேட்கும்
கருத்திருக்கும், கலியாணம் ஆன பின்பு
நலமாக அவர்வாழ மனமொத் தாரா?
எனஅறியும் நாட்டந்தான் அவளுக் கில்லை!

மகள் மேனிக் கேற்றநிறச் சேலை தேடும்
மதியிருக்கும், அச்சேலை மதிப்பை மிஞ்சும்
தகவான நல்வண்ண ரவிக்கை வேண்டும்
தரமிருக்கும், காதுக்குக் கழுத்துக் கொத்த
நகையாய்ந்து பார்த்தெடுக்கும் ஆற்றல் தானும்
நன் றாக வாய்த்திருக்கும் அவள்வி ரும்பும்
வகையான மாப்பிளையா என்று பார்க்கும்
வழக்கந்தான் சிறிதேனும் அவளுக் கில்லை!

—சி. இராமசாமி

*இதழ் பொன்னி, 1947, அக்டோபர்*
*மலர்—1*
*இதழ்—9*



தோழர் சாமி பழனியப்பன் இலங்கை 'வீர கேசரி'யில் துணையாசிரியராய்ப் பணியாற்றுகிறார். தமக்கு முறையெனப்பட்டதைத் துணிவுடன் கூறும் ஆற்றல் அவர்தம் சிறப்பு. புதுப்பட்டி அவர்தம் சொந்த ஊர். "அமைதி கொள்வாய்" என்ற பாடல் அவர் இயற்றியது.

—ஆசிரியர்

## அமைதி கொள்வாய்

அலைகடலே! இவ்வுலகின் பெரும்பகுதி தன்னை
ஆளுகிறோ மென்கின்ற ஆணவத்தி னாலா
நிலைகெட்டுச் சினக்கின்றாய்? உன்னா லிந்த
நீணிலத்திற் கெள்ளளவும் நன்மை யுண்டா?
அலைகளைநீ அடுக்கடுக்கா யனுப்பு கின்றாய்;
அன்னவையோ மடிந்துபடும் ஒவ்வொன் றாக;
நிலைமறந்தே, உயர்வானைப் பிடிக்க ஏனோ
நினைக்கின்றாய்! மறந்துவிடு! அமைதி கொள்வாய்!

வறுமைமிகு தொழிலாள ருணர்வு பெற்று,
வஞ்சகரின் நெஞ்சுகளில் வாள்பு குத்தப்
புறப்பட்டா ரெனக்கூறும் வகையில் நீயும்
பொங்குகின்றா யென்றாலும் மறுக ணத்தில்
இறந்துவிடு கின்றனையே! புறப்பட் டோரின்
இறுதிநிலை யுணர்த்துவதா யெண்ணம் போலும்!
மறந்துவிடு! தொழிலாளர் புரட்சி தன்னை
மாய்க்கவொணா திவ்வையம்! அமைதி கொள்வாய்!

மணித்துளிகள் ஒன்றன்பின் ஒன்றாய்ச் சென்று
மடிதலுக்கோர் எடுத்துக்காட் டாய்வி ளங்கும்
அணிவகுத்துச் சென்றழியும் அலைகள் யாவும்!
ஆர்ந்துள்ள இவ்வுலகில் பெண்ணொ ருத்தி;
கணிகையென ஆகின்றாள் சிலரைச் சேர்ந்தால்!
காரிகைகள் பல்லோரை ஒருவன் சேர்ந்தால்
கணிகனென அன்னவனைக் கழற மாட்டார்!
கடலே! அத் துணிவாலா நீயு மிந்நாள்;

திங்களினைக் கண்டதுமே மேலெ ழும்பித்
தீராத காதலினைத் தீர்க்க எண்ணிப்
பொங்குகின்றாய்? அதனாலே பயனென் கண்டாய்?
புன்மைக்கும் அன்னவனோ ஒப்ப வில்லை.
மங்காத காதல்கொண்ட அல்லி என்னும்
மலர்வனிதை தனைக்கலந்த பின்னர் வேறு
நங்கையினைக் காதலித்தல் தவறா மென்று
நகைத்தலினைக் கண்டிடுவாய் அமைதி கொள்வாய்!

—சாமி. பழனியப்பன்

இதழ் : பொன்னி, நவம்பர் 1947
மலர்—1
இதழ்—10



'பெண்ணென்று சொல்லுவதா?' என்ற இப் பாடலை இயற்றிய திரு. அண. இராமநாதன் வேருப்பட்டியைச் சேர்ந்தவர். தமிழுணர்வு அவர் தம் தலையாய படைப்பு.

—ஆசிரியர்

## பெண்ணென்று சொல்லுவதா?

மங்கையின் புன்முறுவல்—காட்டி
மயக்கும் முல்லைக்கொடி—அவள்
கொவ்வையின் பேரெழிலை—மொட்டாய்க்
குவித்துக் காட்டுகின்றாய்!—அவள்
தங்கிடா இடைபோல—வாடித்
தவித்துத் துடிக்கின்றாய்!—அவள்
பொங்கொளி மேனியைப்போல்—தளிர்
பூத்துக் குலுங்கு கின்றாய்!

மரத்தைப் படர்கின்றாய்!—அவள்
மைந்தனைப் படர்கின்றாள்—மிக
உரத்தைப் பெற்றுவிட்டால்—வெடித்(து)
உப்பிச் சிரிக்கின்றனை!—அன்பின்
தரத்தைப் பெற்றுவிட்டால்—அவள்
தானும் சிரிக்கின்றாள்!—அவை
சிரத்தில் மலர்கின்றாய்!—அவள்
சிந்தையில் மலர்கின்றாள்!

தென்றல் உனைஅணைக்கும்—அவளைச்
சிறுவன் அணைக்கின்றான்!—இன்ப
மன்றல் பரப்புகின்றாய்!—அவள்ஏர்
மணம் பரப்புகின்றாள்!—தளிர்
கன்றல் உடையை! அவள்—தன்உடல்
கன்றல் உடையவளே!—ஓடிச்
சென்றவள் தன்னைச்சார்வாய்!—அவளும்
சேரத் துடிப்பாள், உன்னை!

எத்தனை ஒற்றுமைகள்!—எல்லாம்
எடுத்தி யம்புதற்கு—நானும்
சித்தமாய் இல்லை! முல்லை!—ஏனோ
சிரித்துப் பார்க்கின்றனை!—அவளுன்
உத்தமத் தோழிதானா?—ஓ! ஓ!
உள்ளம் நினைக்கவில்லை!—என்னைப்
பித்தனைப் போலச்செய்தாய்!—உன்னைப்
பெண்ணொன்று சொல்லுவதா?

—அண. இராமநாதன்

*இதழ் : பொன்னி, டிசம்பர்* 1947
*மலர்*—1
*இதழ்*—11



*கோவை இளஞ்சேரன் தமிழ் வித்துவான் பட்டம் பெற்றவர். புதுக்கோட்டையில் தமிழ் ஆசிரியராய்ப் பணியாற்றும் அவர்தம் இயற்பெயர் மெய்கண்ட சிவம். சொந்த ஊர் கோவையில் மன்னார்குடி. 'கண்ணல்ல' என்ற இப்பாடல் அவர் பாரதிதாசன் பரம்பரையினர் என்பதற்கு நல்ல சான்று.*

—ஆசிரியர்

## கண்ணல்ல!

அவளெனக்குக் காதலிதான், ஆனாலும் அந்தக்காதல்
அரும்பியதன் பிறப்பிடத்தை அறிவதற்கு
முனைந்திட்டேன்.
பவளத்தைக் கதவாக்கிப், பலமுத்தால் மேடையிட்டுப்,
பழத்தேனைத் தேக்கிவைத்த பளிங்கறையாம்
வாயமைப்பும்
துவளவைக்கும் நுதலழகும்; தொடைதோயும் கருங்குழலும்;
துளிர்க்குமின்பம் தருவதேனும் காதலுக்கு விதையாமோ?
குவளைமலர் ஆட்டமெனக் குவித்தவளும் இமைப்பொன்றால்
குலைநடுக்கம் ஏற்றுவது கண்ணல்ல! காதற்கூடம்!

கொன்றுவிடக் கோலெடுக்கும் மாலையிலே, சோலைதனில்
கொடிபடர்ந்த மேடையிலே, அமர்ந்திருந்தேன்;
சிலிர்த்ததுதோள்
தென்றலுக்கும் கையுண்டோ எனமயங்கிக் கழுத்தொடித்தேன்
தெளியாத கள்ளுண்டேன் அவளேதான் குனிந்து
நின்றாள்!

வென்றுவரும் வேல்தோற்கும் கருவிழியை, நானிருக்கும்
வெலவெலத்த நிலையுணர்ந்தும் இரக்கமின்றி
''உயிரதனை
மென்றுவிட்டு வா''வென்றே இமையடித்துத் தூதுவிட்டாள்
மென்றுவிடப் பாய்ந்தவைகள் கண்ணல்ல! காதலின்வேர்!

''கணுக்களெல்லாம் காதலேற்றும் கருவிழியில் என்னுருவம்
காண்பதுவும் உன்னுளத்தின் படப்பிடிப்போ'' எனக்
கேட்டேன்.
''நுணுக்கமறி யானைக்கண் நுமக்குளதோ'' எனப்புகன்றாள்
''நின்கரும்புச் சொற்களுக்கு யானையேதான் நா''
னென்றேன்.
துணுக்கென்றே ''பெயரெனக்கு வேம்பன்றோ!''
எனமறுத்தாள்.
சுவைத்துண்ண ஒட்டகமாய்ப் பிறப்ப''னென நயமுரைக்க
அணுக்களையும் தூளாக்கும் அம்பொன்றை எய்துவிட்டாள்
அந்தஅம்பு கண்ணல்ல! காதலுக்கோர் புகைப்படமாம்!

குடக்கணக்கு வேப்பெண்ணெய் இனித்திடாதோ?
''உனதுவாய்க்
குமிழிஎழும் ஒருதுளியால்'' எனமுணுத்தேன்; நாணமதால்
படக்கென்றே திரும்பிவிட்டாள், படையெடுத்த நாணமதில்
பேரழகு முடிசூடிச் சிரிக்கின்ற பெருமை கண்டேன்.
கிடக்கென்னைத் திரும்பிப்பார்! கண்ணல்ல! என்றவளின்
கிளிக்கழுத்தின் மென்மைமிகு முகவாயைத் தொட்ட
ணைக்கக்
கடைக்கண்ணை ஓட்டிவிட்டுக் கண்ணோட்டம் செய்து
நின்றாள்
கண்ணோட்ட மாஅவைகள்? அல்ல! அல்ல!
காதலோட்டம்!

—கோவை இளஞ்சேரன்

*இதழ் : பொன்னி, ஜனவரி, 1948*
*மலர்—1*
*இதழ்—12*

*தோழர் சி. திருநாவுக்கரசு அவர்களின் இக் கவிதை நல்ல தமிழில் இயன்றுள்ளது. அவர் சேலத்தைச் சேர்ந்தவர்.*

—*ஆசிரியர்*

## போதுமாமோ?

வண்டினங்கள் துளைசெய்த வரண்ட மூங்கில்
வழியோடி இசைபரப்பும் காற்று! பெண்டிர்
தண்டைஒலி செய்தோடும் அருவி! எங்கும்
தன்சுருதி கேட்குமாறு வண்டொலிக்க
அண்டையிலே மலர்சிரிக்க ஆடுகின்ற
அழகுமயில் போன்றருகே வந்து நின்றாள்;
கண்டிருந்தேன் அவளழகை! கவிதை ஊட்டும்
கன்னத்திற் கிருமுத்தம் போது மாமோ?

வெங்கதிராய்ப் பனியொழிக்கும்; வெப்பம் நீக்க
விண்ணிலவாய்த் தவழ்ந்திலங்கும் அன்னாள் மேனி!
பொங்குகின்ற என்னுள்ளப் போக்க றிந்து
பூரிக்கும் மெய்யின்பக் கொப்ப ளங்கள்!
மங்காத வாழ்விற்கோர் மலர்ச் சிரிப்பு!
மதுவின்றி மருள்நோக்கால் மயக்க மூட்டி
எங்குமிலாப் புதுமையினைக் காட்டு கின்ற
எழில்முகத்திற் கிருமுத்தம் போது மாமோ?

சிரித்திருக்கும் இளமையினைத் தெரியக் காட்டும்
சிற்றிடையாள் வளையொலியின் பொருள்தான் என்ன?
விரித்திதழை—பல்லொளியை விளங்கக் காட்டி
விழிதாழ்த்தி எனைவிழுங்க எங்கு கற்றாள்?
பிரித்தற்கிங் கிடமில்லை என்று பேசும்
பெயராத அணைப்புடையாள் கண்ணி ரண்டும்
கருத்தோடு கவிழ்ந்துநிலம் நோக்கு தல்தான்
கன்னத்திற் கிருமுத்தம் போதும் என்றா?

—சி. திருநாவுக்கரசு

இதழ் : பொன்னி, 10-8-1948
மலர்—3
இதழ்—13



மதுரை மாவட்டத்தில் உள்ள கோம்பையைச் சேர்ந்த தோழர் ச. சீத்தாராம் திருக்குறளில் பற்றுடையவர். "சீரான்" என்பது அவர் தம் புனைபெயர். 'காலைக் காட்சி' அவரைப் பாரதி தாசன் பரம்பரையினர் ஆக்குகிறது.

—ஆசிரியர்

## காலைக் காட்சி

காலைக் கதிரவனின்—பொன்னொளி
காசினி மேற்பரவ
நீலக் கடலலைகள்—தங்கநிறம்
பெற்றுமே நீந்துதம்மா!

இரத்தினக் கம்பளமாய்—புற்றரை
எழில்மிகும் காட்சிதர
முத்துப் பனித்துளிகள்—அதன்மணி
முடிக ளாகுதம்மா!

பூவினத் தின்வனப்பும்—சிறுவனின்
புல்லாங் குழலிசையும்
ஆவின் மணியொலியும்—மகிழ்வை
ஆறாய்ப் பெருக்குதம்மா!

வான வெளிதனிலே—முகில்கள்
வாகையுற் றுத்திரும்பும்
சேனை யெனச்சென்றிடும்—காட்சியென்
சிந்தை கவருதம்மா!

பாடுபட் டேபிழைப்போம்—என்னுமனப்
பான்மையுள்ள மக்கள்
பீடு நடையழகைக்—கண்டுமனம்
பின்னுங் களித்தேனம்மா!

சோலைக் குயிலிசையென்—காதினில்
தேனைச் சொரியவுமே!
ஞாலத் தழகனைத்தும்—கண்முன்னே
நாட்டிய மாடுதம்மா!

—ச. சீத்தாராம்

இதழ் : பொன்னி, 25-8-1948
மலர்—3
இதழ்—14



*தோழர் தெ. ஜெயராமன் புதுச்சேரியைச் சேர்ந்தவர். அன்று வராத ஆசைக் காதலி 'எங்கு சென்றாளோ?' என்ற ஏக்கத்தில், எதை எதையோ நோக்கி 'எங்கே அவள்?' என்று கேட்கிறார் இந்தப் பாடலில்.*

*—ஆசிரியர்*

## எங்கே அவள்?

பிறந்தநாள் தொட்டெனைத்தாங்கும் புவியே! சாற்று
புகைமேகம் சஞ்சரிக்கும் வானே! சாற்று
நெறிபிறழாக் கதிரவனே! நீதான் சாற்று
நிறையொளியால் எழிலமைக்கும் நிலவே! சாற்று
வறுமையினைத் தமிழ்மொழியால் அழித்தே யுள்ளம்
மகிழ்வுற்ற என்வாழ்வில், புதுமை யொன்றும்
அறியாத என்னகத்தில் தன்தோற் றத்தை
அணங்கொருத்தி தீட்டிவிட்டாள்; அவளின் றெங்கே?

வான்வருடி மலர்சொரியும் சோலை யே! இவ்
வையத்தின் இயற்கையெழில் உயர்த்திக் காட்டும்
கானகமே! பெருமலையே! அருவி யே! நான்
கடமையிலே சிறிதேனும் பிறழ்ந்த துண்டா?
ஏன் அமைதி சாற்றுங்கள்? உண்மை தன்னை
இனிமைசேர் தமிழ்ப்பண்ணைச் சுவைத்த வென்னை
மான்விழியால் தேன்சொற்கள் சுவைக்கத் தந்தாள்
மனமுவந்தேன் மயங்கிவிட்டேன். அவளின் றெங்கே?

—தெ. ஜெயராமன்

*இதழ் :* பொன்னி, 10-9-1949
*மலர்*—3
*இதழ்*—15

குழித்தலையை அடுத்த கடம்பர் கோவிலைச் சார்ந்தவர் தோழர் ஞா. மாணிக்கவாசகன். புரட்சி வேகத்தில் கவிதையின் ஒவ்வொரு வரியும் எக்காளமிடக் காணலாம்.

—ஆசிரியர்

## எச்சரிக்கை

எல்லையில்லா இன்பத்தைக் குவித்து வைத்தே
எடுத்துண்ணச் செல்லுகின்ற ஏழை முன்னே
'இல்லையிதில் உனக்குரிமை செல்க' என்றே
இருகையால் தடைசெய்யும் செல்வர் பேச்சு,
நல்லுலகில் ஏழைமக்கள் வாழ்வு வேண்டி
நடத்துகின்ற புரட்சிக்கு வகுத்த பாதை!
தொல்லையினைப் போக்குதற்கே ஏழை வாழ்வில்
தும்முகின்ற துயரஒலி புரட்சி வேட்டாம்!

இரத்தத்தைக் கண்ணீரால் பெருக்கி விட்டே
ஏழையழும் குமுறலொலி குடிசை கேட்கும்!
உரத்தகுரல் கேட்டிருக்கும் மாடி வீட்டில்
உல்லாச நிலைபற்றி இருக்கும் பேச்சு!
உளுத்திருக்கும் சமுதாய அடிப்படையில்
உயர்ந்துவிட்ட கலைக்கூடம் ஏழை மூச்சு
முழக்கத்தால் டமடமென மண்ணில் சாயும்
வையமிதைப் புரட்சியென்று வாழ்த்துக் கூறும்!

சரித்திரத்தின் முதலேடு சமயப் போர்!
சதிவிளக்கும் அரசியற்போர் அடுத்த பக்கம்!
பொறிக்கின்றார் பொன்னேட்டில் புதுநி கழ்ச்சி
மறத்தமிழர் அறப்போராம் வாழ்வுப் போரால்
சிரித்தாடும் பகைக்குன்றம் செய்து வைத்த
பொய்க்கதைகள் தீயிடுதல் சிறுநி கழ்ச்சி,
குறிக்கின்ற புதுவாழ்வுக் கின்பம் ஊற்றி
வரும்புதுமைப் பெரும்புரட்சிக் கெச்ச ரிக்கை!

—ஞா. மாணிக்கவாசகன்

*இதழ் :* பொன்னி, 25-9-1949
*மலர்*—3
*இதழ்*—16



"பாலைவனம்" தமிழரசன் இயற்றிய கவிதை. அவர் தம் இயற்பெயர் சி மாணிக்கம் என்பதாகும். மதுரை வாசியான அந்த இளைஞர் அமெரிக்கன் கல்லூரி மாணவர்.

—ஆசிரியர்

## பாலைவனம்

பார்த்திடும் இடத்தி லெல்லாம்
    பரந்தமண் பரப்பை யன்றி
நீர்த்துளி காண்ப தற்கு
    நெடுந்தூரம் செல்ல வேண்டும்.
வார்த்தைகள் சொல்ல வியலா
    வறுமையால் வாடும் மக்கள்
ஆர்த்திடும் ஒலியைப் போலப்
    பேய்க்காற்(று) அலறி வீசும்!

திமிங்கிலம் முதுகைப் போலத்
    திரள்மணல், அடிமை மக்கள்
குமுறிய நெஞ்சம் போலக்
    கொதிப்பேறிப் புகையும்; ஆங்கே;
தமிழனின் கீர்த்தி இந்நாள்
    சிதறுண்டு தவிப்ப தைப்போல்
அமைந்தன சோலைப் பூங்கா!
    அங்கெல்லாம் தென்றல் வீசும்!

பகைவரைத் தமிழன் பார்க்கும்
பார்வையைப் போலக் கதிரும்
தொகைபெரு வனத்தை நோக்கி
வெப்பத்தைச் சொரியும்; பின்னர்
பகையல்ல நமக்கிப் பாலை
எனக்கண்டு மாலைப் போழ்தில்
நகைமுகம் காட்டி மெல்ல
மேற்கினில் நகர்ந்து செல்லும்.

மூப்பெய்திப் போன உலகை
மொய்த்திடும் இருளை ஓட்டும்
தீப்பந்தம் கதிரோன் மேற்குத்
திசைக்கடல் மூழ்க, இருட்டில்
தீப்பட்ட புண்கள் போலத்
தெரிந்திடும் மீன்கள்; பின்னர்ப்
பூப்போட்ட திரையைப் போலப்
பொலிந்திடும் அழகு வானம்!

—தமிழரசன்

இதழ்: பொன்னி,
பிப்ரவரி, 1948



அன்பர் கே.டி. தேவர் பம்பாய் மாதுங்காவில் இருந்து தமிழ்த் தொண்டு செய்பவர். இங்கே ஒரு சிறிய நிகழ்ச்சியைக் கவிதையாக்கி வழங்கியிருக்கிறார்.

—ஆசிரியர்

## வந்தால் போதும்

"அத்தானே வேட்டைக்கா செல்லு கின்றீர்?
அடர்காட்டில் எனக்கென்ன கொணர்வீர்?" என்றாள்.
இத்தரையில் உனக்கில்லாப் பொருள்கள் ஏதும்
இருபதற்கு நான்ஒவ்வேன்! எதுதான் வேண்டும்?
சித்தத்தைத் திறந்தெனக்குக் காட்டாய்" என்றான்.
சேயிழையாள் சிரிக்கின்றாள்; அதனில் சொக்கி
நத்திவரும் பார்வைக்குத் தனையி ழந்தான்
நல்லுலகம் அணு அணுவாய் இனித்த தன்றே!

"மான்கொம்பு கொணர்வீரா அத்தான்?" என்றாள்.
"மடமானை ஒருநாளும் சுடமாட் டேனே!
ஏன்கண்ணே! மான்கொம்பைக் கேட்டாய்! அங்கே
இருமான்கள் நடைபயிலும் வேளை தன்னில்
நான்தானா ஆண்மானை வீழ்த்த வேண்டும்?
நங்கையினை நான்மருவி விளையா டுங்கால்
தேன்போலச் சுவைதருமே அதனைக் கண்டும்
தீராத வகைச்செயலைச் செய்வே னாநான்?

''வான்தாவும் வேங்கையினைக் கொணர்வாய் என்று
வாள்விழியே நீகேட்டால் மகிழ்வேன்'' என்றான்.
''மான்வேண்டாம் மரமேறும் வேங்கை வேண்டாம்
அந்திக்கு முன்னால்நீ வந்தால் போதும்!
மீன்வாங்கி நெய்விட்டு வறுவ லாக்கி
மிளகாயின் பொடிதூவி வைத்தி ருப்பேன்
நான் இருக்க நீயிருந்து சுவைப் பதற்கு
நண்ணுவையேல் அதுபோதும் மகிழ்வே'' னென்றே!

—கே. டி. தேவர்

*இதழ் :* *மார்ச்,* 1948
*மலர்*—2
*இதழ்*—2



திரு. நா. கு. நமச்சிவாயன் அவர்கள் ஆம்பூர் ஹிந்து உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராகப் பணியாற்றுகிறார். ''காணவில்லை'' என்ற கற்பனைச் சித்திரம் நமச்சிவாயனாரைப் பாரதி தாசன் பரம்பரையில் சேர்த்து வைக்கிறது.

—ஆசிரியர்

## காணவில்லை

''வான்வெளியிற் செங்கதிரோன் மறையும் வேளை
மலர்ப்பொழிலில் எனைக்காண வருக'' என்று
தேன்மொழியாள் உரைத்ததனைச் சிந்தை தேக்கி
சிறுபொழுதும் தாழ்க்காமல் சென்றேன்; ஆங்கே
கான் அருவிக் கரையினிடை நெளிந்து தோன்றும்
கருமணலின் அழகுகண்டேன்; மதியம் கண்டேன்;
மீன்கண்டேன்; வள்ளையிலை விளங்கக் கண்டேன்;
மெல்லியலாள் அவள்வடிவம் காண வில்லை!

பூங்குமுத மலர்கண்டேன்; பொன்போல் வண்ணப்
புதுக்குமிழப் பூக்கண்டேன்; இளமை மாறா
மூங்கில்கண்டேன்; பசுங்கமுகின் துண்டங் கண்டேன்;
முகங்கொண்ட குரும்பைகண்டேன்; முதிர்வி லாமென்
கோங்கரும்பின் உருக்கண்டேன்; துவளும் வஞ்சிக்
கொடிகண்டேன்; நறுங்காந்தட் குலைகள் கண்டேன்;
தேங்குமெழில் கிளிமூக்குத் திகழக் கண்டேன்;
செறிவளையாள் அவள்வடிவம் காண வில்லை!

''என் அத்தான்! உன்வருகை நோக்கி, நோக்கி
இணைவிழிகள் சோர்ந்தனவே, எதைக்கண் டாலும்
உன்னைத்தான் காணுகின்றேன்; ஒன்றும் கூறா(து)
உளம்திகைக்கக் காரணம்என்? உரையாய்'' என்ற
கன்னற்கு நேர்மொழியென் செவியிற் பாயக்
கனவினின்று விழித்தவன்போல் உணர்வுற் றேன்;என்
முன்னிற்கக் கண்டேன்என் உயிரன் னாளை
முன்கண்ட பொருளனைத்தும் காண வில்லை!

—நா. கு. நமச்சிவாயன்

இதழ்; பொன்னி, 1-4-1948
மலர்—2
இதழ்—3



*அண்ணாமலை நகர் இராமநாதன் செட்டியார் உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராகப் பணி யாற்றும் புலவர் இரா. குழூஉத்தலைவன் அவர்கள் பாரதிதாசன் பரம்பரையினராக அறிமுகம் பெறு கிறார். ''உறங்காதே'' என்ற எழுச்சிப் பாடல் அவர் இயற்றியது.*

*—ஆசிரியர்*

## உறங்காதே

மேடையிலே தெருவினிலே வீட்டில் எங்கும்
விளையாடும் இடங்களிலே நால்வர் மூவர்
கூடுவரேல் முழங்கிடுவார் தமிழர் வாடும்
கொடுமைகளும், தமிழ்அடைந்த குறைவும் பற்றி;
நாடாளும் நேரத்தில் இப்பேச் செல்லாம்
நல்லேட்டுச் சுரையாகும்; பயன்தான் உண்டோ!
ஆடையிலே பெருமாற்றம் வேண்டும் என்பார்;
'அடிப்படையில் மாற்றமொன்றும் அமைத்தா ரில்லை!

ஆளவந்தார் தமிழ்அமைச்சர் என்றோம், வாயால்
ஆக்கிவிட்டார் தமிழ்மொழியை முதன்மை யாக
மாளவந்த மொழிகளெல்லாம் வளம்பெற் றோங்க
வடவருடன் செய்ததவர் மனமே கூறும்.
தாளைவெட்டிப் பயிர்வளர்க்கும் கதைபோல் எல்லாத்
தமிழ்ப்புலவர் தமைவாட்டிப் பயிர்வ ளர்க்கும்
நாள்என்று கழியுமோ? தமிழர் நாடும்
நல்லுரிமைத் தனியாட்சி பெறும்நாள் என்றோ?

ஏன்இனியும் இந்நிலை திராவி டத்தில்?
இழிநிலையைப் போக்காமல் இருப்ப தேனோ?
தேன்மதுரத் தமிழ்உண்டு, திண்டோள் உண்டு
சிங்கமெனத் திரண்டுவரும் இளைஞர் உண்டு
வான்கதிர்போல் வழிகாட்டத் தலைவர் உண்டு
வலியுண்டு, கையினிலே வாளும் உண்டு
தான்இனியும் உறங்காதே தமிழா! நாட்டைத்
தலைநிமிர்த்த எழுந்திடடா தடந்தோள் தட்டி!

—இரா. குழுஉத்தலைவன்

இதழ் : பொன்னி, 15-5-1948
மலர்—2
இதழ்—4



கற்பனையைப் பற்றித் தம் கருத்தினைக் கவிதையாக்கியுள்ள தோழர் கு. திரவியம் மதுரையைச் சேர்ந்தவர்; பல தமிழ் ஏடுகளில் 'ரவி' என்ற புனைபெயரில் எழுதி வருகிறார்.

—ஆசிரியர்

## கற்பனை

ஒலியற்ற வேளையிலே, இருள்கூட்டும் வானில்
ஒளிவீசித் துடிக்கின்ற பலவெள்ளி நடுவே
குலவுகின்ற எழிற்கன்னி இன்முகத்தி லெல்லாம்
குளிர்நகையைத் தெளிக்கின்ற வெண்ணிலவின் ஊடே
உலவுகின்ற உளத்தினிலே சிந்தனைகள் நடுவே
ஊடுருவிப் பாய்கின்ற எண்ணஒளி தானே
உலகிடையே காவியமாய்ச் சிற்பமதாய் மாறும்!
உயிரோட்டம் கொள்கின்ற ஓவியமாய் மின்னும்!

வாசமுல்லை மலருவதை வண்டிருந்து பாடும்
வடிவத்துக் காட்சியினை வடிக்கின்ற கலைஞன்
பாசமிகும் உள்ளத்தின் பண்ணொலியாய் மாறும்!
பருவத்தைக் கண்டவுடன் பட்டுவிட்ட மரங்கள்
ஆசையுடன் தளிரிலைகள் ஆட்டிநிற்றல் போல
அரியதொரு கற்பனையின் உறவுதனைக் கூடி
வீசுகின்ற தென்றலினும் இனியதொரு சுவையை
மீட்டுகின்ற கவிதைகளாய்க் கலைக்கரத்தில் மின்னும்!

தேனுண்டு மலருண்டு வண்டுகளும் அண்டும்
தெவிட்டாத கற்பனைகள் கலைகாட்டும் தேனே!
வேனிலிலே மணம்வீசும் சோலையிலே இன்ப
வேய்ங்குழலில் பண்ணுடனே மெல்லியர்க ளோடு
மேனிதொட்டுக் காண்கின்ற இன்பத்தைப் போன்று
மெய்யான கலையின்பம் கண்டிடவே வேண்டின்
வானிடையே நீந்துகின்ற உளமலர்ச்சி வேண்டும்!
வாராத இன்பங்கள் வையமிதில் உண்டோ?

—கு. திரவியம்

இதழ் : பொன்னி, 15-6-1948
மலர்—2
இதழ்—5



ஆர்வமும் ஆற்றலும் நிறைந்த இளைஞர் திரு. சு.வழித்துணைராமன் அவர்கள் பாரதிதாசன் பரம்பரையினர். தூத்துக்குடி அவர் தம் சொந்த ஊர். ஆறு பற்றிய கற்பனை அவராக்கம்.

—ஆசிரியர்

## ஆறு

துயில்கின்ற மலையின் ஊற்றே!
துள்ளிடும் மறியே! காயும்
வெயிலுக்கு நெளியும் வெள்ளி
உருக்கே!பொன் மணலுக் குள்ளே
பயில்கின்றாய் ஆடல்! பாடல்!
பாறையில் தொத்தித் தொத்தி
மயில்விரி இறக்கைக் கண்போல்
வடிக்கின்றாய் குமிழி முத்தே!

நாகம்போல் நளினம் காட்டி
நகர்கின்ற நதியே, வெட்கம்
தேகத்தை மூடா வண்ணம்
திரிவதில் இல்லை என்றே
யூகித்தாய்! மரங்கள் பூவின்
ஆடையை அணிவித் தாலும்
வேகத்தால் விலக்கிச் செல்வாய்!
வெட்கந்தான் இறந்து போச்சோ?

யாருனை ஆறென் றார்கள்?
அழைத்ததை நினைத்துத் தானோ
பேரினுக் கேற்ப நீயும்
பெருந்தன்மை விளக்கிக் காட்டி
ஊரினுக் கூழி தொட்டு
உயிர்வாழ வழியுண் டாக்கி
ஏரினுக் குயிரே ஆகி
எம்பசி ஆற்று கின்றாய்!

—சு. வழித்துணை ராமன்

*இதழ் : பொன்னி, 1-7-1948*
*மலர்—2*
*இதழ்—6*



ரங்க துரைவேலன் பர்மாவில் பிறந்த தமிழர். அரசாங்கப் பணியாற்றும் இவர் தமிழில் அளவு கடந்த ஆர்வமுடையவர். பல ஏடுகளிலே இவர் பாடல்கள் வெளிவந்துள்ளன.

—ஆசிரியர்

## கவலை இல்லை

ஆணழகே உமதினிய முடங்கல் கண்டே
ஆடிற்றாம் என்றுள்ளம் அன்பால் நீங்கள்
பேணுகின்ற நற்காதல் இலக்கியத்தைப்
பெய்திருப்பீர் என்றெண்ணிப் பிரிந்தேன் ஆனால்
கோணலுற்ற சமூகமெனும் குள்ள வாத்தின்
கூவலினை முடங்கலிலே காட்டி விட்டீர்!
நாணிற்றாம் என்னுள்ளம்! நமது நட்பை
நாடேற்க வில்லைஎனில் கவலை யில்லை!

காதலினை ஈருயிரின் இணைப்பு தன்னைக்
கட்டாரி யால்வெட்டத் துணிந்து விட்டார்.
சாதல்எனும் நிலைவரினும் அஞ்ச மாட்டோம்
சாவதிலும் காதலராய்ச் சாவோம் என்று
சோதனைக்கு விடநினைத்தீர் உலகில் காதல்
தோற்றதனால் உயிர்விட்ட காதல் வீரர்
காதைபல கோடிகண்டும் கருணை காட்டாக்
கல்நெஞ்சர் மனம்பற்றிக் கவலை யில்லை!

கணைதொடுத்துக் காதலினை வீழ்த்து கின்ற
கல்லுளியாம் சமுகத்தின் உறவு நாடி
இணைந்தஉள்ளக் கட்டுதனை வெட்டு கின்ற
இரும்புநெஞ்சப் பெற்றோரின் மடமை தன்னை
துணைநிற்கும் சமுகந்தைத் தூள்தூ ளாக்கும்
துணைத்தோள்கள் இரண்டுண்டே, அவற்றால் என்னை
அணைத்தின்பம் கண்டமறு கணமே இந்த
ஆருயிரே போமெனினும் கவலை யில்லை!

—ரங்க துரைவேலன்

இதழ் : பொன்னி, 15-8-1948
மலர்—2
இதழ்—7



''எங்கள் வாழ்வை''ச் சித்தரிக்கும் தோழர் வா. செ. குலோத்துங்கனாரின் இயற்பெயர் குழந்தைசாமி. திருச்சி மாவட்டம் தென்னிலையை யடுத்த 'வாங்கலாம் பாளையம்' என்ற சிற்றூர் அவர்தம் சொந்த ஊர். இப்பொழுது காக்கி னாடா பொறியியற் கல்லூரியில் படிக்கின்றார்.

—ஆசிரியர்

## எங்கள் வாழ்வு

கலைசொட்டும் கனிஎங்கள் வாழ்வு—அன்புக்
கதிர்வீசும் விழிசொல்லும் கதைகேட்டு வாழ்வோம்!
மலைவிட்டு வருகின்ற தென்றல்—உலவும்
மலர்க்காட்டில் குயிலோடின் னிசைபாடி மகிழ்வோம்!
சிலையொத்த தளிர்மேனி உடலார்—காதல்
தேன்தன்னை, மூரல்மலர் செம்பவள இதழாம்
இலையிட்டு வழங்கிடுவர் உண்போம்—உண்டு
இன்பத்தி லூறிஉயர் அன்பிலே திளைப்போம்!

திங்கள் மலர்வானச் சோலை—வாரிச்
சிந்தும் சுவைத்தேன் அருந்தித் திளைத்தே
பொங்கும் உணர்ச்சிப் பெருக்கில்—காதல்
பூத்துக் குலுங்கிப் பொலன்செய்ய, மின்னும்
செங்கை அணைப்பில் களிப்போம்!—ஊற்றுத்
தீஞ்சுவை நீர்போல் தெளிந்து நிறைந்து
தங்கச் சிலைசமைந் தாற்போல்—வையத்
தாழ்வு கடந்த தனிநிலை காண்போம்!

மடியேறி விளையாடும் குழந்தை—இன்ப
　　வாரிக்குள் விளைந்திட்ட தரளமோ? காதல்
கொடியேறி யவிழ்ந்திட்ட மலரோ?—எங்கள்
　　கூட்டுக் களிப்பிள் சிரிப்போ?—கடல்சூழ்
படிவாழ்வு வானத்து நிலவோ?—மழலை
　　பருகத் தெவிட்டாத பண்பென்ன சொல்வோம்!
அடிவானக் கதிர்வண்ண உடலம்—அள்ளி
　　அணைத்துக் களிப்பின் கரைகண்டு வாழ்வோம்.

—வா. செ. குலோத்துங்கன்

இதழ் : பொன்னி, 1-9-1948
மலர்—2
இதழ்—8



நண்பர் வெ. குருசாமி அவர்கள் "புயலை" இயற்றியிருக்கிறார்கள். "பிறையழகன்" அவர்தம் புனைபெயர். திண்டுக்கல் அவர்தம் சொந்த ஊர். இப்பொழுது சென்னையில் ஆசிரியராகப் பணியாற்றுகிறார்.

—ஆசிரியர்

## புயல்

கண்மூடி வீசு கின்ற
கடும்புயற் காற்றே! உன்றன்
விண்மூடு விரிவை அஞ்சி
வியர்த்தது வானம்; தூற்றல்
மண்மூடும் படியால் வீழ்ந்து
மக்களும் நடுங்கி அஞ்சப்
பண்பாடி உலவு கின்றாய்!
பயனுண்டோ உன்னால் சொல்லாய்!

தென்றலோ உன்றன் தங்கை?
சிறிதேனும உண்மை யுண்டோ?
என்றேனும் தங்கைக் குள்ள
இயல்பிலே புயலே நீதான்
ஒன்றேனும் காட்டி அந்த
உறவைத்தான் நிறுவு பார்ப்போம்.
அன்றேநான் உன்றன் ஏவல்
அடிமையாய் உழைக்கின் றேனே!

இளவேனில் தொடங்கும்; தென்றல்
இன்புற்றுத் துள்ளும் சோலைக்
குளமெலாம் மலர்கள் பூக்கும்;
குதித்தோடி மாதர் கூட்டம்
மளமள வென்று சென்று
மலர்களைக் கொய்யும்; இந்த
வளமெலாம் புயலே! உன்றன்
வாழ்விலே அமைந்த துண்டோ?

தொண்டுதான் செய்யும் ஆர்வம்
துளியேனும் உண்டோ? தேனை
உண்டாலும் தேனீ அந்த
உதவிக்குப் பதிலாய்த் தாதைக்
கொண்டுபோய் வேறு பூவில்
கொட்டியே உதவும்! நீயோ
அண்டிய உடனே பூவை
ஆட்டியே உதிர்க்கின் றாயே!

புதுப்புது மதங்கள் தோன்றும்,
புயலே! அம் மதங்க ளுள்ளே
எதுவேனும் துன்பம் நீக்கி
இன்பத்தைக் கொணர்ந்த துண்டோ?
பதிப்பிலே புதிதாம், ஆனால்
பழையதே சரக்காம்! சொந்த
மதிப்பிலே உன்னைப் போன்றே
மசியாத உறுதி யுண்டே!

கொச்சையாய்ச் சொன்னேன் என்று
கோபிப்பாய்! புயலே சொல்லும்
சொச்சத்தைக் கேட்டுப் பின்னர்
சொல்உன்றன் கருத்தை; நீயும்
அச்சத்தை மூட்டிக் கண்முன்
அறியாமை இருள்போல் தோன்றி
எச்சத்திற் கலைகின் றாயே!
நீயுந்தான் மதத்தின் தோழன்!

—வெ. குருசாமி

இதழ் : பொன்னி, 15-10-1948
மலர்—2
இதழ்—9





*தோழர் துன. சுந்தரராசன் திருமறைக்காட்டை யடுத்த கடிநல்வயல் என்ற சிற்றூரைச் சேர்ந்தவர். அழகிய தமிழ் அவர் பாடல்களில் எழில்பெருக்கும். 'ஏன் சிரித்தாள்?' அதற்கொரு எடுத்துக்காட்டு.*

*—ஆசிரியர்*

## ஏன் சிரித்தாள்?

அந்திவரப் பூக்கின்ற செந்தாமரை போல
அழகுமுகம் மலர்ந்திட்டாள், என்விழியால் பறித்தேன்
சந்தத் தமிழ்ச்சுவையின் தேனமுத ஒளியைத்
தரைகுளிரப் பொழிகின்ற நிறைகலைநி லாவும்
வந்ததுவே விந்தைஎன்ன? நிலமீதில் என்னை
மயக்குதற்கோ; வந்துநின்றாள்? கைமிஞ்சும் காதல்
உந்துகின்ற உணர்ச்சியதை உதட்டினிலே காட்ட
உடைத்தாள்மா துளைமுத்தை உதிர்த்தாள்ஏன்சிரிப்பாய்?

இடுப்பொடிப்பாள்; இடச்செவியில் மணித்தொங்கல் ஆடும்
எழிற்கன்னம் முத்தமிட வலத்தொங்கல் வாடும்.
கொடிப்புருவம் நுதல்மேட்டில் படரும், நுதல் சுருங்கும்
கோடிவிழிச் சாடையிலே குளிர்ப்பார்வை அரும்பும்—
படிப்,புனிதை எனைஒருநாள் சந்தித்தாள், பார்த்தேன்.
பழனத்தில் பூத்திடுந்தா மரைமுகமாய்ப் பூத்தாள்
அடுப்பாக எரிக்கின்றாள் அணைப்பறியேன்; ஏனோ
ஆம்பலிதழ் பூக்கின்றாள்? இதற்காகத் தானோ?

—துன. சுந்தரராசன்

*இதழ் :* *பொன்னி*, 30-10-1948
*மலர்*—2
*இதழ்*—13

*புகழ் பெற்றுள்ள சக்தி நாடக சபையின் உரிமையாளர் திரு. டி.கே கிருஷ்ணசாமி அவர்கள் ''தமிழ்ப் பணி'' என்ற இப்பாடலை இயற்றியுள் ளார்கள். ''இளமதி'' அவர்தம் புனைபெயர்.*

*—ஆசிரியர்*

## தமிழ்ப் பணி

சித்திரத்தில் அமைத்திடவோர் கவிஞ னில்லை!
செம்பொற் சிலம்பதனை அணிவிக்க
இத்தினத்தில் இளங்கோவன் என்றஓர்
அரசனில்லை, இலக்கியநீர்க் கடலினிலே
முத்தெடுத்து மேகலையிற் கோத்திடவோர்
புலவனில்லை, முக்கனியில் தமிழ்த் தேனின்
சத்தமைத்து மறைசெய்ய வள்ளுவனும்
ஈங்கில்லை என்செய்வோம் தமிழ்த்தாயே!

உன்னிலைக்கே இரங்குகிறோம்! உன்னுடலின்
அணிகளெலாம் ஒளியிழக்க உன்மக்கள்
தன்னிலையை உணருகின்ற தகைமைதனை
நீயறிந்து தண்கருணை நீர்பாய்ச்சி,
முன்னிலையை எம்முள்ளே செழித்திடவே
செய்துவிட்டால் முடிசூடி உன்னழகைச்
சென்னிமுதல் அலங்கரித்துச் சிலம்புவரை
உலகமெலாம் கண்கொள்ளச் செய்யோமோ?

பாலைவனம், கற்பாறை, வரட்டு நெஞ்சப்
பாவிகளைப் பண்படுத்தித் தீந்தமிழின்
சோலைவனம் ஆக்குகின்ற செயலினிலே
ஊரிழந்து சோறிழந்து உயிர்நீங்கும்
காலையிலும் எம்மருமைத் தமிழ்த்தாயின்
பெருமைதனைக் கூவிஎழிற் காதலியின்
மாலைமலர் முகங்கண்ட மகிழ்ச்சியுடன்
மாய்ந்திடவும் கொஞ்சமும்நாம் அஞ்சோமே!

—டி. கே. கிருஷ்ணசாமி

*இதழ் : பொன்னி, 10-11-1948*





தோழர் பெ. நாகப்பன் அரிமழத்தைச் சேர்ந்தவர். பாரதிதாசன் பரம்பரையில் ஒருவராக வேண்டுமென்பதில் அவருக்குப் பெரும் ஆர்வம் உண்டு. தமிழ்ப் பெரியார் திரு. வி.க. அவர்களைப் பற்றி அவர் எழுதிய பாடல் இது. அவர்தம் ஆர்வத்தின் விளைவு.

—ஆசிரியர்

## திரு. வி. க.

கண்டொத்த இலக்கியங்கள்
கனிதமிழில் தந்துள்ளார்;
பண்பட்ட உளமுடையார்!
பார்ப்பதற்கு மிகஎளியார்!

கருதியதைச் செயலாக்கிக்
காட்டிடவே என்றென்றும்
உருவாக்கும் உளமுடையார்
உறுதிசொல்லி எதனையுமே!

உண்ணும் உணவினிலும்
உயர்நூல்கள் தந்தவரை
எண்ணும் பொழுதெல்லாம்,
இதயமெலாம் மகிழுதடா!

தேன்மணக்கும் வாயெல்லாம்
திரு.வி.க. என்றுசொன்னால்!
'நான்சுவைப்பேன் அவர்நூல்கள்'
எனநவிலும் நாவெல்லாம்!

தொண்டுசெய்து வாழ்வாரின்
தொகைஅதிகம் என்றாலும்
உண்மையிலே தொண்டியற்றும்
உயர்பெரியார் திரு.வி.க.!

—பெ. நாகப்பன்

*இதழ் : பொன்னி*, 10-11-1948



தோழர் பெரி. சிவனடியான் புதுவயலைச் சேர்ந்தவர். காரைக்குடிக்கல்லூரியில் கலைபயின்று வரும் இவர்கவிதைகளும் எழுதுவார். சொற்பொழி வாற்றுவதிலும் வல்லவர்.

—ஆசிரியர்

## மாற்றந் தேவை!

கல்விதனில் அரசியலில் சமூக வாழ்வில்
கடவுளரை வணங்குகின்ற முறைமை தன்னில்
தொல்லைதரும் மதப்பித்தில், தோகை நல்லார்
தோய்ந்திருக்கும் அறியாமை, மடமை தன்னில்
எல்லையிலா இழிவுதனை ஏற்றி வைக்கும்
இந்துமதப் புராணத்தை ஏற்கச் செய்து
புல்லறிவால் மக்களைஏ மாற்றி வாழும்
பொல்லாதார் வாழ்விவற்றில் மாற்றந் தேவை!

ஆலையிலே பாட்டாளி ஆவி போகும்,
அரியணையில் அரசாங்கம் அயர்ந்து தூங்கும்.
வேலையிலாத் திண்டாட்டம் விரைந்து மேவும்,
வேண்டாத இந்திவிதை விளையத் தூவும்,
சோலையிலே உலவுகின்ற கிளியைப் போலே
சுகம்காண முதலாளி மார்கள் வாழும்
ஆலயத்தின் செல்வத்தை அழுத்திக் காக்கும்,
அறிவில்லாச் செயல்களிலே மாற்றந் தேவை!

வெல்லமெனும் தமிழழிக்க முயல்வார் வாழ்வில்,
வியர்வையினை நீராக்கும் உழவர் வாழ்வில்,
பல்லக்கி லிருந்துண்ணும் பரமன் பக்தர்
பஞ்சணையில் மதுவோடு பழகும் வாழ்வில்,
கல்லறைக்குள் சென்றமொழி திரும ணத்தில்,
கடவுளர்முன் கதறுகின்ற காட்சி தம்மில்,
எல்லாமே துன்பமதாய் சேர்ந்தி ருக்கும்
என்றமிழர் வாழ்வதனில் மாற்றந் தேவை!

—பெரி. சிவனடியான்

*இதழ் :* பொன்னி, 10-11-1948
*மலர்*—2
*இதழ்*—14



*தோழர். எஸ் சிவப்பிரகாசம் பாரதிதாசனின் மாணவர். இப்போது தம் ஊராகிய புதுச்சேரி யிலேயே தமிழாசிரியராய்ப்பணியாற்றி வருகிறார். பல கவிதை நூல்களை இயற்றியுள்ளார்.*

*—ஆசிரியர்*

## விந்தைச் சமூகம்!

நண்பகற் போதினிலே—செய்த
நல்லுண வுண்டபின்னர்,
கண்மணி போன்றவளாம்—தன்னொடு
காதற் சிறுமிதனை
அண்மை தனிலழைத்தே—தலை
அழகு றச்சீவி
வண்ண மலர்முடித்தாள்—நல்ல
வாசனைச் சாந்துமிட்டாள்.

சீவிய சீப்புமுதல்—பின்னர்ச்
சென்றெ டுத்துவைக்க
மேவினள் அவ்விடத்தே—தாயும்
மீந்த மலர்கிடக்க,
ஆவலாய்த் தானெடுத்தாள்—அதன்
அரிய மணம்முகர்ந்தாள்
தாவியே சென்றதுகை—அவள்
தலையில் சூடுதற்கே!

அந்தோ என்னசொல்வேன்—அவள்
அடைந்த மாற்றத்தினை!
சிந்தை துடித்துவிட்டாள்—கண்கள்
சிந்தின நீர்த்துளிகள்!
நொந்த உளந்தனிலே—மேலும்
நோய்பல ஏற்றுவிட்டாள்!
விந்தை யுறுசமுகம்—செய்யும்
வேதனை தீர்வதென்றோ?

—எஸ். சிவப்பிரகாசம்

*இதழ்:* *பொன்னி*, 15-11-1948
*மலர்*—2
*இதழ்*—15



தோழர் சி. அ. சீனிவாசன் சின்னதாரா புரத்தைச் சேர்ந்தவர். தற்போது உடுமலைப் பேட்டையில் இருந்து வருகிறார். வருத்த வேண்டாம் என்னும் இப்பாடல் நிலவொடு கிளத்தல் என்னும் துறையின் பாற்படும்.

—ஆசிரியர்

## வருத்த வேண்டாம்!

பொட்டிட்டுப் பெருமையுடன் பொன்ந கைகள்
பூணுதற்கும், அழகுதரும் மஞ்சள் பூசிப்
பட்டுடைகள் பூந்துகில்கள் ஆசை யோடு
பைங்கொடிநான் அணிவதற்கும் உரிமை யில்லை,
மட்டில்லா மகிழ்வுடனே எழிலை யூட்டும்,
மணமலர்கள் சூடிடவும் வாய்ப்பே யில்லை.
தட்டினைப்போல் வான்பரப்பில் ஒளிதெ ளிக்கும்
தண்ணிலவே என்றனைநீ வருத்த வேண்டாம்.

தளர்ந்துவிட்ட கிழவனுக்கும் இந்த நாளில்
தாரத்தை இழந்தாலும் பின்னும் ஆங்கோர்
இளம்பெண்ணை மனைவியெனச் சேர்த்து வைப்பார்
எழில்மிகுந்த இளம்பெண்ணோ கணவன் செத்தால்
உளம்உடைந்து நடைப்பிணமாய் உருவ ழிந்தே
உலவிடல்தான் முறையெனவே வேதம் சொல்லும்
உளுத்துவிட்ட கொள்கையுள்ள சமூகந் தன்னை
ஒழிக்கச்செல்! என்னையினி வருத்த வேண்டாம்!

—சி. அ. சீனிவாசன்

இதழ் : பொன்னி, 10-12-1948
மலர்—2
இதழ்—16

தோழர் மு. ரெங்கநாதன் புதுவயலைச் சேர்ந்தவர். காரைக்குடி கல்லூரியில் கலை பயின்று வருகிறார். எத்துறையிலும் முதன்மையுற்று நிற்க வல்லவர்.

—ஆசிரியர்

## கனவிலே வந்தாள்!

நானங்கு வருவதனை ஊரார் கண்டால்
நகைப்பாராம், அதையெண்ணி அவளின் தந்தை
தேன்மொழியாள் உள்ளத்தும் என்னுள் ளத்தும்
திரண்டெழுந்த காதலுக்குத் தடைவி தித்தார்.
வானத்து மீனுக்கா தூண்டி லிட்டேன்!
மாதிவளை இழந்திடவா காதல் செய்தேன்?
ஏன்பிறந்தேன்? எனஏங்கி வருந்திக் கொண்டே
ஏழெட்டு நாழிகைநான் பிரிந்தும் வாழ்ந்தேன்!

சொல்லழகும் கருத்தழகும் தோன்ற யாத்த
தூயதமிழ்ப் பாட்டொத்த தோகை நல்லாள்
இல்லத்திற் கருகினிலே ஏக்கத் தால்நான்
இரவினிலே ஒளிந்துசெலும் கள்வ னைப்போல்
செல்லுகையில் அவள்வடிவைச் சிறிது கண்டேன்,
செயல்மறந்தேன்; அவள்வீட்டுத் தோட்டம் சேர்ந்து
நல்லஇளம் காளையைப்போல் நிமிர்ந்து நின்ற
நாவல்மரத் தருகினிலே சென்ற மர்ந்தேன்.

மழைவருமா? என்றேங்கும் உழவனைப்போல்
மரத்தடியில் அவள்வரவிற் கேங்கும் போது
பழிகாரக் கருநிறத்துப் பாம்பொன் றெந்தன்
பக்கத்தில் வந்ததெனப் பயந்து பார்த்தேன்;
எழிலணங்கின் கார்போன்ற கூந்த லுக்கே
என்தோள்கள் இருப்பிடமாய் இருக்கக் கண்டு
விழிகளை நான் திறந்திட்டேன்; என்ன கண்டேன்!
வீட்டினுளே படுத்திருந்த நிலைமை கண்டேன்!

—மு. ரெங்கநாதன்

இதழ் : பொன்னி, 25-12-1948
மலர்—2
இதழ்—17



*தேவி பட்டணத்தில் ஆசிரியராய்ப் பணியாற்றும் தோழர் ஜே. எஸ். பொன்னையா இயற்றியுள்ள பாடல் பின்வருவது; அவர் பாரதிதாசன் பரம்பரையினர்.*

*—ஆசிரியர்*

## கழனியில் வந்து கூவு!

குயில் : சேவலே! செட்டை தட்டிச்
சிறப்புடன் கூவி நிற்பாய்
தாவிநீ பறப்பாய் கோழிச்
சண்டையில் சளைக்க மாட்டாய்
கேவலம் சிறுமைக் கூண்டில்
கிடந்துநீ மடிவ தென்ன?
கூவநீ ஆசைப் பட்டால்
கூண்டைநீ திறந்து வாராய்!

கோழி : காரணக் கவிதை பாடும்
கரிக்குயில் கண்ணே கேளும்
சேரமான் சோழன் பாண்டித்
திருவிடம் திரிந்த என்னை
சோரமாய்க் கயவர் யாரோ
சூத்திரக் கூண்டு கட்டி
வீரமும் பலமும் போக்கி
வெறுமையாய்ச் சிறையில் வைத்தார்!

குயில் : வெளியிலே வந்தால் உன்றன்
வீரமும் தெரியும்; பாச
வலையிலே சிக்கி மோசம்
வருவித்துக் கொண்டாய் நீதான்
தலையிலே சிவப்புக் கொண்டைச்
சேவலே! சாதிக் கோழி
கலைவளம் வைகை பொன்னி
கழனியில் வந்து கூவு;

கோழி : தூண்டில்முள் புழுவைக் கவ்விச்
சிக்கிய கெண்டை மீன்போல்
கூண்டினில் இரையைக் கண்டு
கொத்திட உள்ளே போனேன்
ஆண்டுகள் பலநா ளாக
அகப்பட்டுக் கொண்டேன் உள்ளே
பாண்டிய னிடத்தில் சொல்லிப்
பறப்பதற்கு விடமாட் டாயா?

குயில் : தூதுதான் சொல்ல வந்தேன்
சூத்திரக் கதவைத் தள்ளு
வேதனை உனக்கு நீங்கும்!
வெளியிலே வந்து நிற்பாய்!
கீதம்நான் சொல்லக் கேளு;
கிளிகளும் பாடும் பள்ளு!
ஓதிடும் பெரியார் சொல்லை
உண்மையென் றறிந்து கொள்வாய்!

—ஜே. எஸ். பொன்னையா
இதழ் : பொன்னி, 25-1-1949
மலர்—2
இதழ்—18

*தமிழாசிரியராய்ப் பணியாற்றும் அன்பர் கதி. சுந்தரம் மூன்றாம் ஆண்டுத் தொடக்கத்தில் அறிமுகம் பெறுகிறார், வெண் முகில் அவர் இயற்றியது. வலம்புரி சுந்தரம் என்று அவரை அழைப்பர். தமிழார்வம் மிக்க இளைஞர்.*

—*ஆசிரியர்*

## வெண் முகில்

வெண்முகிலே! உன்னைப்போல் கடலை நோக்கி
விரைந்தோடும் கட்டழகி தன்னைப் பாராய்
தண்மணத்தின் சின்னாளில் கணவன் மாய்ந்தான்
சாற்றிநின்றாள் தையலவள் வேற்று மணம்
வன்மனத்தார் சுற்றத்தார் வாட்டி விட்டார்
வாழ்க்கையிலே வெறுப்புற்றாள் முடிவு காண்பாள்
ஒண்முகிலாள் வெண்மையதோ உலகை ஆட்டும்
உன்வெண்மை உலகத்தார்க் கின்ப மூட்டும்.

உற்றறியும் ஒருமனிதன் ஒற்றைக் காயை
உயிரோடும் மூக்கதனில் வைத்து லாவும்
பெற்றியது என்றுரைக்கப் பெரிய வானில்
பேசாமல் சுற்றுகின்றாய் அங்கும் இங்கும்
வற்றாத கடலதுவும் நம்மால் அன்றோ
வாழ்கின்ற தென்கின்ற எண்ணத் தாலே
எற்றாலும் பிறர்உதவி எனக்கு வேண்டாம்
என்கின்ற செருக்கதனைக் கொண்டாய் நீயே.

மடமைதரு அச்செருக்கு மாளும் என்றேன்
　　மாக்கடலின் பக்கத்தே பணிந்து நின்று
கடல்சிரித்துத் தருகின்ற தண்ணீர் தன்னைக்
　　கதிரவனின் உதவியதால் கவர்ந்து கொண்டாய்
உடலதனின் குருதியதை உறிஞ்சி விட்டே
　　உறுமுகின்ற கூட்டத்தார் தன்னைப் போன்று
கடலதனின் நீரதனைக் கவர்ந்த பின்பு
　　கதறுகின்றாய் கார்க்கடலை எதிர்த்து மேலே!

— கதி. சுந்தரம்

இதழ் : பொன்னி, 10-2-1949
மலர்—3
இதழ்—1



தோழர் எம். எஸ். மணி திருக்கழுக்குன்றம் "கௌமார மடத்தில்" கல்வி பயின்று வருகிறார். மயக்கமுற்றேன் அவருடைய பாடல். பல இதழ்களிலும் அவர் தம் பாடல்கள் வருகின்றன.

—ஆசிரியர்

## மயக்கமுற்றேன்

தண்ணொளிபூத் தெழுநிலவிற் சாள ரத்தின்
தாள்திறந்தென் இருக்கையிலே சாய்ந்தி ருந்தேன்.
விண்ணகத்தே மிதந்திடுவெண் முகிலி னங்கள்
விரைந்தோடி மதியவளைத் தாவு தல்போல்
எண்ணமெலாங் கலைமலரும் காத லில்லுக்
கேகிப்,பின் எதையோநற் பொருளை என்றன்
கண்ணகத்தே நிறுத்திற்று! கனிந்த சாயற்
கட்டழகி என்முன்னே நிற்கக் கண்டேன்.

நின்றவள்தன் சிற்றிடையை அசைத் துலுக்க,
நீள்விழியின் ஒளியென்பால் வீசி டும்!கை
அன்றலர்ந்த மலரேந்தி, அபிந யத்தோ(டு)
"ஆணழகா! எனக்கன்பு காட்டா யோசொல்"
என்றியம்பக் கேட்டருகிற் சென்றேன் கண்க(ள்)
ஏந்திழையை உற்றொருகால் பார்க்க, அங்கே
நின்றிருந்த தூண்கண்டு, நினைத்த எல்லாம்
நிழலென்று யானறிந்து மயக்க முற்றேன்.

—எம். எஸ். மணி

இதழ் : பொன்னி, 25-2-1949
மலர்—3
இதழ்—2

நாகன் என்ற புனைபெயருள்ள தோழர் நா. கணேசன் நாட்டரசன் கோட்டையைச் சேர்ந்தவர். தமிழ் ஆர்வமுடைய இளைஞர். ஓவியனைப் பற்றி அவர் தீட்டிய கவிதை ஓவியம் இது.

—ஆசிரியர்

## ஓவியம்

சிறுசிறு கோடெனும் சிற்றுளியால்
சேர்ந்த தூரிகை தரும்நிறத்தால்
உறுதி யுண்மை படிநோக்கால்
ஓவியம் வரைந்து மகிழ்வித்தாய்!

ஆழப் புதைந்து கிடக்கும்ஒளி
அழகு மணியை அகழ்ந்தெடுத்துச்
சூழப் படர்ந்த இருளகற்றித்
தொல்கவிச் சித்திரம் தருவோனே!

வாய்பே சாத உயிர்கட்கு
மாந்தர் இழைக்கும் கொடுமையெல்லாம்
காய்ந்து மனத்தைச் சுடுமாறு
கலையால் உணர்த்தும் கவிமனத்தோய்!

பஞ்சை மக்களின் சேரியையும்
　　பசியால் வாடித் தம்உயிரை
நெஞ்சில் லார்க்கே நீர்வார்க்கும்
　　நீதி காணா மக்களையும்

அஞ்சி மறந்து வாழ்வோர்க்கே
　　அதனைக் காட்ட உயிர்துடிக்கும்
செஞ்சொல் பேசும் சித்திரங்கள்
　　தீட்டும் உன்றன் திறனென்னே!

—நா. கணேசன்

இதழ் : பொன்னி, 10-3-1949
மலர்—3
இதழ்—3





தோழர் தி. அரசுமணி நெல்லை வட்டத்தைச் சேர்ந்த ஐயாபுரத்தைச் சேர்ந்தவர். இப்போது கோவை விவசாயக் கல்லூரியில் கலை பயின்று வருகிறார்.

—ஆசிரியர்

## வெண்ணிலவே!

வெண்ணிலவே! வெகுகால மாக இந்த
விண்மீது சுழல்கின்ற தொன் மதியே!
தண்ணளியே யுருவாய சாந்த வீரர்
தன்மானத் திராவிடத்தா ரென்னு மெங்கள்
வண்டமிழர் மரபாண்ட வல்லு னர்கள்
வாழ்ந்திட்ட அக்காலம் கண்ணுற்ற நீ
வன்செயலார் வலைசிக்க வாடும் இந்த
மாத்தமிழர் நிலைநோக்கி மனமி ரங்காய்?

போரிலே புறங்காட்டாப் புலிகள் தம்மைப்
புல்லேந்தி ஏய்த்தார்கள் என்னு மொரு
காரியங் கண்டிட்ட பின்னு மேன்நீ
களிப்போடு முழுமேனி காட்டு கின்றாய்?
வீரியம் இல்லாஅவ் வீரர் காணும்
விண்ணினைவிட் டுப்பே ராழி மூழ்கிக்
காரிருள் போல்சூழ்ந்த மடமை நாட்டைக்
கடந்துபோ! நின்வீச்சால், பயனிலையே!

—தி. அரசுமணி

இதழ் : பொன்னி, 25-3-1949
மலர்—3
இதழ்—4

*தருமபுரியைச் சேர்ந்த நண்பர் ப. சண்முக சுந்தரம் பாரதிதாசன் பரம்பரையினர்; தமிழ்த்தாய் பற்றிய அவர் பாடல் சுவை நிறைந்தது; அவர் ஒரு நாடகாசிரியர்.*

*—ஆசிரியர்*

## தமிழ்த் தாய்

சிலம்பொலிக்க என்னருகில் ஒருத்தி வந்தாள்
சிற்றிடையில் மேகலைதான் மின்னக் கண்டேன்!
சிலிர்த்திடகல் ஒளிகாலும் அணியாம் சிந்தா
மணியினையும் திருமார்பிற் கண்டேன்! செய்ய
நலஞ்சேரும் குண்டலமும் காதில் மின்னக்
கண்டிட்டேன்! நானுளத்தைப் பறிகொடுத்தேன்!
கலகலென வளையொலிக்க வந்தாள் என்றன்
கையிலொரு பொருள்வைத்தாள்! சிரித்து நின்றாள்!

என்னவிது! என்னவிது! என்றேன்; ஒன்றும்
எனக்குரைக்க மாட்டாமல் அருகில் வந்தாள்;
'முன்னரென்னைக் கண்டதுண்டோ?' என்று சொல்லி
முன்பக்கம் நின்றிட்டாள்; அடடா என்றன்
கன்னல்தமிழ்க் கன்னியன்றோ? முப்பா லின்தாய்
கற்பனைக்கும் எட்டாத புலமை தந்த
சொன்னயத்தின் திரளன்றோ? தூய அன்புச்
சுடர்காட்டும் தாயென்றே போற்றி நின்றேன்.

—ப. சண்முகசுந்தரம்

*இதழ்* : பொன்னி, 10-4-1949
*மலர்*—3
*இதழ்*—5

சென்னை மயிலாப்பூரைச் சேர்ந்த நண்பர் க. பரமசிவன் பாரதிதாசன் பரம்பரையினர்; கற்பனை நயமும் சொல்லினிமையும் "காதற் பூங்கா" கொண்டியங்குகிறது.

—ஆசிரியர்

## காதற் பூங்கா!

கன்னி யொருத்தி குதித்து வந்தென்
கன்னத்தில் முத்தம் இட்டாள்—அவள்
தென்னை மரத்தி லிருந்து விழுந்தஓர்
தேன்துளி யென்று கண்டேன்.

புன்னை மரத்தில் கிளைக ளெல்லாம்
பூவைச் செறிந்து நின்ற!— அவை
பொன்னை நிகர்த்த ஒருத்தி சூட்டிய
பூவார மென்று கண்டேன்.

வண்ணக் கிளியொன்று பண்ணி சைத்தே
வண்டமிழ் பேசி யிருக்க — அதைப்
பெண்கட் கரசி என்றன் காதலி
பேச்சென் றெண்ணி வியந்தேன்!

இன்னும் அருகில் இலந்தை தனிலோர்
எழிற் குருவியைக் கண்டேன் — அது
என்னிற் கலக்கப் பாய்ந்திடும் கண்ணிணைக்
கிமைகள் என்று நின்றேன்.

—க. பரமசிவன்

இதழ் : பொன்னி, 25-4-1949
மலர்—3
இதழ்—6

*கவிஞர் மாவண்ணா தேவராசன் திருவத்தி புரத்தைச் சேர்ந்தவர். இவர்தம் இசைப் பாடல்கள் கருத்துக்கினிய தமிழ் விருந்து. 'வாய்முத்தா சிந்திப் போகும்?' என்ற இவ்வினிய பாடல் அவர் வரைந்தது.*

*—ஆசிரியர்*

## வாய் முத்தா சிந்திப் போகும்?

தொழிலாளர் பொதுவுடமை ஆட்சி காணத்
தொல்லைபல தாம்பொறுத்தும் தொடர்ச்சி யாக
வழிதோறும் கிளர்ச்சிசெய்து வருதல் போல்நான்
வரும்இடர்கள் பலதாண்டி இன்றெவ் வாறோ,
எழிலேஓர் வடிவாகி இருக்கும் உன்பால்
எய்தி,என தாசையெலாம் எடுத்து ரைத்தேன்;
அழுவாரைத் தேற்று(ம்)நல் லார்போல், ஓர்வாய்ச்சொல்
அழித்தால்,உன் வாய்முத்தா சிந்திப் போகும்?

வாயாத பேரழகு வாய்ந்த உன்னை
மறவாத என்தமிழுக் கீடாய் எண்ணி
மாயாத பெருங்காதல் உன்பால் கொண்டேன்;
மறையாதென் மனத்துயர்உன் மொழிகே ளாமல்!
ஓயாமல் ஆய்ந்துமுண்மை காணார் போல்நான்
ஒழியாமல் அடுத்தடுத்தே மாறி வந்தேன்!
சாயாத மலர்க்கொடியே! உன்வா யின்சொல்
தந்தாலுன் வாய்முத்தா சிந்திப் போகும்?

செல்வர்மனை சென்றுதெருக் கடையில் நின்று
''சிறுபிச்சை'' எடுப்பவரைக் காக்க வைத்துப்
பல்வகையும் வருத்துகிற பணக்கா ரர்போல்
பைந்தமிழின் முகம்படைத்த பாவை நீயும்
வல்வினையே னைக்காக்க வைத்து வாட்டல்
வழக்கலவே! மகிழ்ந்தருள்வாய்; 'ஊம்'' என் றோர்சொல்
நல்வழியில் நானுய்ய நயந்திச் சொல்நீ
நல்கிடின்உன் வாய்முத்தா சிந்திப் போகும்?

—மாவண்ணா தேவராசன்

*இதழ் : பொன்னி,* 15-5-1949
*மலர்*—2
*இதழ்*—7



தோழர் மா. குமாரசாமி விழுப்புரத்தைச் சேர்ந்தவர். தீய புயலையும், 'திருந்தி வாழ்' என்று வாழ்த்தும் தமிழ்ப் பண்பை இப்பாடல் மூலம் அவரிடம் காண்கின்றோம்.

—ஆசிரியர்

## புயல்

பார்க்கின்ற வீதி மாந்தர்
பார்வையைப் புழுதி மண்ணால்
போர்க்கின்றாய்; உயர்ம ரங்கள்
பொடிபட முறித்து வீழ்த்தி
ஆர்க்கின்றாய்; வீட்டுக் கூரை
அதிரச்செய் தவற்றை மண்ணில்
சேர்க்கின்ற புயலே உன்றன்
சேட்டையை என்ன சொல்வேன்!

திண்ணிட்ட மணல்மேட் டைநீ
திருத்தியோர் குழியாய்ச் செய்வாய்
மண்ணிப்போர் குழியை மேடாய்
மாற்றினும் மாற்று வாய்;நின்;
கண்பட்ட பொருள்க ளெல்லாம்
காற்றிலே பறக்கச் செய்வாய்!
பண்பட்ட இயல்ப தொன்றும்
படைத்திலை போலும் நீதான்!

வன்கண்மை கொண்டு நீஇவ்
வையத்தில் செய்யும் மாற்றம்
மின்கண்ணால் சினந்து நோக்கும்
மேல்வானம் கருமு கில்கள்
உன்செய்கை கண்டு நொந்து
உறுமும்;பின் கடலும் உன்னைத்
தன்கைகள் விரித்து நீட்டித்
தகைவிலாய் "போபோ" என்னும்!

வல்லூறாய் அமைந்தாய் போலும்
வையத்து அமைதிக் கேநீ!
கல்லாத கயவர் போலக்
கருத்தின்றிச் செயல்கள் செய்வாய்;
எல்லோரும் உன்னைக் காய்வர்;
ஏனோதான் உனக்கிப் புன்மை?
பொல்லாத செயல்மேற் கொண்டாய்
புயலேநீ திருந்தி வாழி!

—மா. குமாரசாமி

*இதழ் : பொன்னி,* 10-6-1949
*மலர்—3*
*இதழ்—9*

தோழர் ப. முத்துச்சாமி பாரதிதாசன் பரம்பரையினர். பாரதிதாசன் மருகரான வித்துவான் கண்ணப்பரிடம் தமிழ் கற்ற சிறப்புடையவர். செவந்தி பாளையம் புதூர் அவர்தம சொந்த ஊர்.

—ஆசிரியர்

## கலை மடந்தை

நெஞ்சத்தில் குளிர்வைப்பாள்; இருட்டொ ழிக்கும்
நிலவாகிப் பாய்ந்திடுவாள்; யாழ்ந ரம்பில்
சஞ்சரிக்கும் இசையாவாள்; எழுத்தி டையே
தாரகையாய் ஒளிவிடுவாள்; புதுமைத் தேவி
கஞ்சமலர் முகமலர்த்தி ஆடும் பெண்டிர்
கண்வழியே நெளிந்திடுவாள்; எண்ணம் செய்யும்
விஞ்சையதாம் கற்பனையில் மூழ்கி, மூழ்கி
விளையாடும் கலைமடந்தை அவள்தான் கண்டீர்!

ஓவியத்தில் உயிர்வரியாய் மின்ன லிட்டே
உளிமுனையில் சதிராடிச் சிற்பம் செய்வாள்.
ஆவியினில் அணுஅணுவாய் இன்பம் ஊற்றும்
அதிசயத்துக் காதலாகிச் சிரித்து நிற்பாள்
பூவினிலே கொழித்திருக்கும் மணத்தைப் போலப்
புத்திளமை கலையாத புன்ன கையாய்த்
தாவிடுவாள் பெண்உதட்டில், அறிவ ரங்கின்
தமிழ்க்குரலாம் கலைமடந்தை அவள்தான் கண்டீர்!

கள்ளத்தால் வாழாதார்; மெய்யு ழைப்பைக்
 காட்டுகின்ற ஏர்மழவர் வெற்றி மூச்சாம்
பள்ளத்தில் கிடக்குமொரு சமுதா யத்தின்
 பசியறுக்கும் உணர்வன்னை அவள்தான் கண்டீர்!
உள்ளத்துப் படுதாவில் எண்ணம் சேர்த்தே
 ஒளிக்கவிகை தீட்டிடுவாள் நச்சுப் பான்மை
உள்ளத்தால் சாகாதாள்; வீர மாகி
 ஒளிதீட்டும் கலைமடந்தை அவள்தான் கண்டீர்!

—ப. முத்துச்சாமி

இதழ் : பொன்னி, 25-6-1949
மலர்—3
இதழ்—10



தோழர் ஷரீப் மதுரையைச் சேர்ந்தவர். அமெரிக்கன் கல்லூரி மாணவர். கைம்பெண் ஒருத்தி நிலையிலே இருந்து கொண்டு வாழ்வின் ஏமாற்றத்தைப் பாடுகிறார்.

—ஆசிரியர்

## வாழ்வு

அன்றொருநாள் நண்பகலில் உணவருந்தி விட்டு
அழகாக உடையுடுத்தி அலுவலகம் சென்றார்.
என்சொல்வேன் என்கணவர் சென்றசில மணியில்
இடியெனவே செவிமடுத்தேன் 'இறந்துவிட்டார்'
என்றார்!
அன்புருவாய் அமைந்திருந்த கணவர்பலி யானார்.
அடுத்துவந்த கூற்றுவனாம் மோட்டார்மோ திற்றாம்
நன்றுநன்று வாழ்வுலகில் நவிலும்நிலை யாமோ
நாதர்உயிர் நீத்தபின்பு என்கதிதான் என்னே?

"எழில்பூத்த இவ்விருவர் ஆண்டுபல வாழ்வார்"
எனமொழிந்த சோதிடனின் ஏற்புரைதான் எங்கே?
பழிதவிர ஏதுகொள்ளும் சாத்திரங்கள் வேறு
பகர்வீரே உலகோரே என்வாழ்வைப் பார்த்தே!
இழிமொழிகள் ஏன்கூறார் சீர்திருத்தக் காரர்
இதுபோன்ற சாத்திரங்கள் இருக்கும்வரை நாட்டில்?
விழியெல்லாம் நீரொழுக விதவைநிலை யுற்றேன்
'விதி' 'யென்பார் இந்நிலையை மதிகுறைந்த வீணர்!

பெண்களுக்குச் சமஉரிமை வேண்டுமெனக் கூறும்
 பேச்சாளர் எங்குசென்றார்? வாயடைத்தேன் போனார்?
பெண்களுக்கும் ஆண்களுக்கும் தனித்தனியே நீதி
 பிறந்திருக்கும் இந்நாட்டில் சமஉரிமை வேண்டின்
பெண்களுக்கு மறுமணமும் சொத்துரிமை தானும்
 பெறும்வகையைச் செய்வதின்றிப் பேச்சளவில் நின்றால்
என்றிந்த நாட்டினிலே பெண்ணினத்திற் கமைதி
 எதிர்காலச் சிற்பிகளே! எடுத்துரைக்க வாரீர்!

—ஷரீப்

*இதழ் :* *பொன்னி*, 10-7-1949
*மலர்*—3
*இதழ்*—11





தோழர் சுப்பு ஆறுமுகம் தச்சநல்லூர் அருகில் உள்ள சத்திரம் புதுக்குளம் என்ற ஊரைச் சேர்ந் தவர். ஊடற்குறி காட்டும் தலைவியை நோக்கி "உனக்காக எத்தனை இடர் கடந்து வந்தேன்" என்று கேட்டுத் தலைவன் அவளைத் தன்வயப் படுத்தும் காட்சியை இப்பாடலில் சித்தரிக்கிறார்.

—ஆசிரியர்

## இடர் கடந்து வந்தேன்

மலையைக் கடக்கையிலே—மாபெரும்
மாருதம் தாக்கியதே!
நிலையைக் குலைத்தலைத்தே—உடம்பை
நிறுத்தாது தள்ளியதே!

இருள்நிறைந்த காடு—பாம்புகள்
எங்கும் வளைந்து நெளியும்
வரும்வழியை யறியேன்—எனினும்
வந்திடும் சிந்தை கொண்டேன்.

கல்லும் முள்ளும்குத்தும்—ஆனால்
கால்கள் விரைந்து செல்லும்
சொல்லும் தரத்ததில்லை—துன்பம்
சோர்வுயான் கொண்டதில்லை.

சாரல் மழைபெய்தது—என்னுடல்
தாங்கி மீதேறி வந்தேன்
சோர்வு களைப்பென்பதை—என்னுளம்
தூர விரட்டியதே!

எண்ணில் இடர்எதிர்த்துக்—குமரிநான்
ஏங்கிக் காத்திருந்தேன்
எண்ணம் திரிந்தனையோ?—துயர்அற
இன்பமுகம் காட்டுவையோ?

—சுப்பு ஆறுமுகம்

*இதழ் : பொன்னி*, 25-7-1949
*மலர்*—3
*இதழ்*—11



தோழர் சங்கீத பூஷணம் எஸ். எம். இராமநாதன் அவர்கள் இராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள புதுவயலைச் சேர்ந்தவர். இசையில் வல்லவர் என்பதை அவர் பெற்ற பட்டம் எடுத்துக்காட்டுகிறது. "புரட்சி செய்தால் என்ன?" என்ற பாடல் அவர் புரட்சிக் கவிஞரின் பரம்பரையினர் என்பதை எடுத்துக் காட்டுகிறது.

—ஆசிரியர்

## புரட்சி செய்தால் என்ன?

காலைமுதல் மாலைவரை வயல்கள் தம்மில்
களைப்பார ஓய்வின்றி உழைக்கும் மக்கள்
ஓலையிலே நெல்லென்றே எழுதிப் பார்க்கும்
உலுத்தவொரு நிலைமையிந்த நாட்டிலுண்(டு); அவ்
வேளையிலே பாடுபடா தொருசா ரார்தம்
வீட்டில்நெற் குவிந்திருக்கும்; ஏழை மக்கள்
வேலைசெய்தும் உண்ணவழி இல்லை யென்றால்
மேதினியில் பெரும்புரட்சி செய்தால் என்ன?

ஆலையிலே தொழிலாளி அயர்ச்சி யின்றி
ஆடைகளை ஆக்கிநிதம் குவித்து வைத்தும்
ஏழைமக்கள் வாங்கிஅதை அணிவ தற்கோ
இயலவில்லை; ஏனென்றால் எங்கே யோஓர்
மூலையிலே கொண்டதனை முடக்கி விட்டார்;
மிகலாபம் வேண்டுகின்ற உளத்தி னோர்கள்.
காலநிலை உணர்ந்(து) அவர்கள் திருந்தா விட்டால்
காசினியிற் கடும்புரட்சி செய்தால் என்ன?

பள்ளியிலே பிள்ளைகளைப் படிக்க வைக்கப்
பணவசதி இல்லாத காரணத்தால்,
உள்ளத்து வேதனையால் உருக்கு லைந்தார்
உண்மையிலே பெற்றோர்கள் இந்த நாட்டில்;
எல்லையிலா வரிவிதிக்கும் ஆள வந்தோர்
ஏழைமக்கள் கற்கவழி செய்யா விட்டால்
துள்ளிஎழும் காளைகளே! நீங்க ளெல்லாம்
சூழ்விடுத்தே அறப்புரட்சி செய்தால் என்ன?

—எஸ். எம். இராமநாதன்

இதழ்: பொன்னி, 10-10-1949




தோழர் கி. மனோகரன் அவர்களின் ஊர் நாகர்கோவிலை அடுத்த கோட்டாறு. மலையாள மாணவராகிய இவர் தன்மான இயக்கப் பற்றும் தமிழார்வமும் உடைய இளைஞர்.

—ஆசிரியர்

## செல்வதெங்கே?

காதலுளம் எங்கள் உளம்
கவலையிலா வாழ்வு!
சாதலில்லை! சாதிவெறி
சமயச்சதி யில்லை.
பேதமில்லை: வாழ்வினிலே
பிணக்குகளு மில்லை
வாதமில்லை; மனத்தினிலே
வாதனையு மில்லை.

கனல்பிழம்பாய்க் காட்டும்விழி
குளிர்நிலவாய் மாறும்
கனல்மொழியாள் வாயூறும்
தேனருவி யுண்டு!
தனைமறந்தே தகதகெனத்
தலைசுழற்றும் உள்ளம்
எனையணைத்தாள் முயக்கினிலே
ஏறியெழும்! வாழும்!

செங்கரும்பை வாங்கிவரச்
சொன்ன நினைவின்றித்
தங்குமிடம் வந்தவனைத்
தையலவள் கேட்டாள்,
'செங்கரும்பை வாங்கிவரச்
சொன்னதெங்கே?' யென்று
'செங்கரும்புன் இதழிருக்கச்
செல்வதெங்கே?' என்றேன்.

—கி. மனோகரன்

இதழ் : பொன்னி, 10-10-1949
மலர்—3
இதழ்—17

இளைஞர் வே. சண்முகம் தூத்துக்குடியைச் சேர்ந்தவர். தமிழழகன் என்ற பெயரில் பாடல்கள் எழுதி வருகிறார். தமிழ் ஆர்வமுடைய இவர் வித்துவான் படிப்புப் படித்துக் கொண்டிருக்கிறார். ''இடி மின்னல்'' அவர் இயற்றியது.

—ஆசிரியர்

## இடி மின்னல்

விண்ணெலாம் கறுப்பின் வெள்ளம்!
வீரநெஞ் சத்தே ஆக்க
எண்ணங்கள் சுழல்வ தைப்போல்
எங்குமே மேகப் பின்னல்!
எண்ணத்தில் புதுமை போல
இடையிடை மின்னல் கீற்று
வண்ணமாய் நெளிவ தோ,கண்
வாங்கிடும் எழிற்சி ரிப்பே!

ஆர்த்தன இடிமு ழக்கம்,
'அழிப்பேன் இச் சமுதா யத்தில்
வேர்க்கொளும் இடரை' என்னும்
வீரனின் குரலைப் போலே!
வேர்த்தனள் இயற்கை யன்னை
வீசிடும் புயலின் வேகம்
சேர்த்ததாம் ஆர வாரம்
செடிமரம் வீழ்ந்த வம்மா!

சடசட வென்ற ஓசை
சார்ந்தது, திக்கெட் டுந்தான்.
படபட வென்ற டித்துப்
பறித்தன ஒன்றை யொன்று.
கடகட வென்று ருட்டிக்
கண்ணொளி வாங்க லாச்சு!
தடதட வெனும்மே கத்தின்
தருக்கிடி மின்ன லாலே!

—வே. சண்முகம்

*இதழ் : பொன்னி, 1949*
*மலர்—3*
*இதழ்—19*



# பாரதிதாசன் பரம்பரை

| | | |
|---|---|---|
| தொகுப்பாசிரியர் | : | உவமைக்கவிஞர் சுரதா |
| அணிந்துரை | : | 'பொன்னி' முருகுசுப்ரமணியம் |
| அச்சிட்டவர் | : | டாக்டர் மூவேந்தா முத்து |
| அச்சுக் கோத்தவர் | : | செல்வி தேன்மொழி |
| நூலை உருவாக்கியவர் | : | மறுமலர்ச்சிக் கவிஞர் மணிமொழி |
| முகப்போவியம் தந்தவர் | : | ஓவியச்செல்வர் ஜமால் |
| பாவேந்தர் படத்தேர்வு | : | இலக்கியச்சித்தர் தங்கவயல் லோகிதாசன் |








**சுரதா பதிப்பகம்**

**56அ, Dr. இலட்சுமணசாமி சாலை, கே. கே. நகர் சென்னை-78.**